# NEW!

# POWER PACKED SURF




புதிய பவர் பேக்டு ஸர்ஃப்.

பூரிக்குது இதன் புத்தமைப்பு சக்தி. பொங்குது இதுவரை இல்லாத ஏற்றமான ஆற்றல்: ஆழ ஊடுருவித் துப்புரவாக்குகிறது—உங்கள் வெள்ளைத் துணிகள் எல்லாம் ஒப்பற்ற வெள்ளை-வெளேர், வர்ணத் துணிகளோ உன்னத ஒளிமயம்.

அதே சமயம், துணிகளின் புதுமை காத்து நெடுநாள் வாழ்விக்கிறது! வெளுக்கும் ஒவ்வொரு சட்டையும் ஒவ்வோர் ஆடையும் வெண்மை மிடுக்கு, புதுமைக் கிருக்கு ..புத்தாடைபோல் வெளுப்பு...

சலவைக்கு சலவை பொலியும் புதுமை!

**புதுமை தவழும் புதுமணம்:** கமழ்ந்த வண்ணம் இருக்கும் உங்கள் துணிகள்மீது—சுத்தம் தவழும் புத்தம் புதுமை, பக்கத்தில் இருப்பதே இனிமை.

**ஜோரான புதிய பேக்:** சக்திச் சுரங்கமான இத் தயாரிப்புக்கு உற்ற பொருத்தம்.

வாரீர் இன்றே வாங்கிக்கொள்வீர் பவர் பேக்டு ஸர்ஃப்.

## ஸர்ஃப் சலவை: ஒப்பற்ற வெள்ளைவெளேர், சகல துணிகளுக்கும் புதுமை ஜோர்!

LINTAS-SU-325-2416 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

# "கர்நாடகத்தின் கதவுகள் திறந்தே இருக்கின்றன!"

## — அன்புக்கரம் நீட்டுகிறார் ஹெக்டே

**பெ**ங்களூரிலுள்ள கர்நாடக முதல்வர் ராமகிருஷ்ண ஹெக்டேயின் வீட்டிற்குச் சென்ற போது அதிகாலை ஐந்தே முக்கால் மணி. இலேசான பனி மூட்டத்துடன், விடிந்தும் விடியாமலுமிருந்த அந்த அதிகாலைப் பொழுதிலேயே, ஹெக்டேயின் வீட்டிற்கு முன்னாலுள்ள காம்பவுண்டு கதவுக்கு இரு புறமும் ஆண்களும் பெண்களுமாகக் கையில் மனுக்களை வைத்துக் கொண்டு காத்திருந்தார்கள்.

ஒவ்வொரு நாள் காலையிலும் சரியாக ஆறு மணிக்குப் புறப்பட்டுத் தமது வீட்டிலிருந்து சுமார் இரண்டு கி. மீ. தொலைவிலுள்ள 'இண்டியன் இன்ஸ்டிடியூட் ஆப் சயன்ஸ்' கல்லூரி வரை ஹெக்டே வாக்கிங் செல்வது வழக்கம். அதற்குமுன் வெளியில் காத்திருக்கும் மக்களிடமிருந்து மனுக்களைப் பெற்றுக் கொள்வதும் அன்றாட வாடிக்கை!

நாங்கள் சென்றிருந்த அன்றும் அப்படித் தான்! சரியாக ஆறு மணிக்கு வெளியில் வந்தார் ஹெக்டே. முதலில், பெண்கள் பக்கம் சென்று மனுக்களைப் பெற்றுக் கொண்டார். ஏதோவொரு சடங்காக அல்ல; ஒவ்வொரு மனுவையும் அந்த இடத்திலேயே படித்துப் பார்த்து, அதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதையும் அப்போதே— அந்த மனுவிலேயே குறிப்புகளை எழுதி உதவியாளர்களிடம் கொடுக்கிறார். யாருடைய மனுவையும் படித்துப் பார்க்காமல், படித்த பிறகு அதற்கான முடிவைச் சொல்லாமல் அவர் வாங்கவேயில்லை.

"நான் இரண்டாம்வகுப்பில்பாஸ்செய்து விட்டேன் சாப்!" வரிசையில் நின்றிருந்த ஓர் இளம் பெண் சொன்னாள்.

"இரண்டாம் வகுப்புத்தானா? ஏன் முதல் வகுப்பு என்று ஒன்று இருப்பது உனக்குத் தெரியாதா? முதல் வகுப்பாக இருந்திருந்தால் நான் இன்னும் சந்தோஷப்பட்டிருப்பேன்! அப்போதே சொன்னேன், 'படி! படி!' என்று. கேட்டால்தானே!" அந்தப் பெண்ணைச் செல்லமாகக் கடிந்து கொண்டார் ஹெக்டே.

"நீங்கள் கொடுக்கும் இந்த மனு சம்பந்தப்பட்ட இலாகா அமைச்சர் பொம்மை அவர்களுடையது. மற்றவர்களுடைய இலாகாவில் நான் எப்போதும் தலையிட மாட்டேன். தயவு செய்து நீங்கள் அவரைப் போய்ப் பாருங்கள்!"

"சாப், அவர் கவனிப்பாரோ மாட்டாரோ — என்று..."

"நிச்சயம் கவனிப்பார். உங்களுடைய குறைகளைக் கவனிப்பதற்காகத்தானே அவர் அமைச்சராக இருக்கிறார். அவரையே போய்ப் பாருங்கள்!



* இந்த மனு சம்பந்தப்பட்ட இலாகா அமைச்சர் பொம்மையுடையது..

—இப்படி அங்கு கூடியிருந்த ஐம்பதுக்கும் மேற்பட்டவர்களின் மனுக்களை வாங்கிக் குறிப்புகளை எழுதி உதவியாளர்களிடம் கொடுத்துவிட்டு வாக்கிங் புறப்படும் போது சரியாக மணி ஏழு.

''சரி, வாருங்கள்! நடந்து கொண்டே பேசுவோம்!'' என்ற ஹெக்டேயிடம், ''இத்துணை எளிமையாக மக்களிடம் பேசிப்பழகும் நீங்கள், அவர்களிடமிருந்து மனுக்களைப் பெற்றுக் கொள்ளும்போது, அவர்களை இரும்புக் குழாய்களால் ஆன வேலிக்கு அந்தப் பக்கம் நிறுத்துவானேன்! உங்களுக்கும் மக்களுக்கும் இடையில் அந்த வேலி எதற்கு?'' என்று கேட்டேன்.

''மக்களிடமிருந்து என்னைப் பிரித்துக் காட்டுவதற்காகவோ அல்லது அவர்களிடமிருந்து என்னைப் பாதுகாத்துக் கொள்வதற்காகவோ போடப்பட்ட வேலி அல்ல அது. அந்த வேலியின் தடுப்பு மட்டும் இல்லாமல் இருந்திருந்தால் மனுக் கொடுத்தவர்களில் சிலர் என் காலில் விழுந்திருப்பார்கள். என் காலில் அவர்கள் எதற்காக விழ வேண்டும்? ஒருவர் காலில் ஒருவர் விழுவதென்பது — குறிப்பாக என் காலில் மக்கள் விழுவதென்பது என்னால் ஜீரணித்துக் கொள்ள முடியாத விஷயம். அதற்காகத்தான் அந்த வேலி!''

''இப்போது உங்கள் உடல்நலம் எப்படி இருக்கிறது? ஆபரேஷனுக்குப் பிறகு தொண்டை சரியாகி விட்டதல்லவா!''

''நௌ ஐயாம் ஆல்ரைட். ஆனாலும் அதிகமாகப் பேசினால் தொண்டை வறண்டு போய் விடுகிறது. அதுதான் கொஞ்சம் சிரமமாக இருக்கிறது. அதற்காகத்தான் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் மௌன விரதமிருந்து தொண்டைக்கு ரெஸ்ட் கொடுத்துக் கொண்டிருக்கிறேன்.

''நீங்கள் அதிகம் சிகரெட் பிடிக்கிறீர்கள். அதனால் கூட தொண்டை வறட்சி ஏற்படலாமல்லவா?''

''என் மனைவி கூட நம்புவதில்லை. ஆனாலும் நான் இப்போது சிகரெட்டை நிறையக் குறைத்திருக்கிறேன் என்பது தான் உண்மை!''

''தேர்தலுக்கு முன்பு நீங்கள் முதல்வராயிருந்ததற்கும் இப்போது முழு மெஜாரிட்டியோடு முதல்வராயிருப்பதற்கும் ஏதேனும் வித்தியாசத்தை உணருகிறீர்களா?''

''தேர்தலுக்கு முன்பிருந்த எங்களின் நிலை உங்களுக்கே நன்றாகத் தெரியும். இப்போது அப்படியில்லை. கட்சித் தாவல் தடைச் சட்டமும் வந்துவிட்டதால் எங்களால் எதையும் நம்பிக்கையோடு செயல்படுத்த முடிகிறது. முன்பிருந்ததொரு பயமான சூழ்நிலை இப்போது துளியும் இல்லை!''

''அகில இந்தியாவிலேயே கர்நாடகத்தில் மட்டும்தான் ஜனதா ஆட்சிப் பொறுப்பில் இருக்கிறது. இந்த வெற்றியும் ஜனதாவுக்குக் கிடைத்த வெற்றி என்று சொல்வதை விட, ஹெக்டே என்ற தனிப்பட்ட நபரின் செல்வாக்கால் கிடைத்த வெற்றி என்பது தான் சரி — ஹெக்டே இல்லாமல் கர்நாடகத்தில் ஜனதாவே இல்லை என்று சொல்லலாமா?''

''இந்தியாவிலேயே கர்நாடகத்தில் மட்டும்தான் ஜனதா ஆட்சியிலிருக்கிறது என்பது உண்மை. ஆனால் அந்த ஆட்சிக்குக் காரணம் ஹெக்டே என்ற தனி நபருக்கிருக்கும் செல்வாக்குத்தான் என்பது உண்மையல்ல. நீங்கள் சொல்வது போல் எனக்கிருக்கும் தனிப்பட்ட செல்வாக்கும் கட்சிக்குச் சொந்தமானதே தவிர — அதைக் கட்சிக்குச் சொந்தமாக்க வேண்டுமே தவிர அதில் சுய ஆதாயம் தேடக் கூடாது. மூன்றாவதாக ஹெக்டே இல்லாமல் கர்நாடகாவில் ஜனதாவே இல்லை என்பதும் உண்மையல்ல. சம செல்வாக்குள்ள பல தலைவர்கள் ஜனதாவில் இருக்கிறார்கள். இந்த வெற்றிக்கு அவர்களும் முக்கிய காரணம்.''

''இ. காங்கிரஸ் அல்லாத முதல்வர் என்ற முறையில், பஞ்சாப், அஸ்ஸாம் மாநிலங்

களின் பிரச்னைகளுக்குத் தீர்வு கண்ட ராஜீவ் காந்தியின் சாதனையைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்? இந்திரா காந்தியை விட ராஜீவ் காந்தி பரவாயில்லை என்று சொல்லலாமா?''

''இந்தப்பிரச்னைகளுக்குத்திருமதி இந்திரா காந்தியாலேயே தீர்வு கண்டிருக்க முடியும். ஆனால் ஒருசில அரசியல் ஆதாயங்களுக்காக அவை தீர்க்கப்படாமல் இருப்பதே நல்லது என்று கருதினார். அதனால்தான் அவர் தீர்வு காணவில்லை. எதற்கும் ஓர் எல்லை உண்டு; எந்தப் பிரச்னைக்கும் ஒரு தீர்வு உண்டு. அந்த வகையில்தான் இப்போது அந்தப் பிரச்னைகள் தீர்க்கப்பட்டிருக்கின்றன. இதனாலேயே திருமதி இந்திரா காந்தியைவிட திரு. ராஜீவ்காந்தி பரவாயில்லை என்று சொல்லிவிட முடியாது.'' என்று ஹெக்டே சொல்லி முடிப்பதற்கும் 'இண்டியன் இன்ஸ்டிடியூட் ஆப் சயன்ஸ்' கல்லூரி வாசல் வருவதற்கும் சரியாக இருந்தது.

கல்லூரிக்குள் நுழைய ரோடை கிராஸ் செய்தாக வேண்டும். ஆனால் சாலையின் இரண்டு பக்கங்களிலிருந்தும் பஸ்களும், கார்களுமாகச் சென்று கொண்டே இருந்தன. அந்தப் பக்கமும் இந்தப் பக்கமும் பார்த்துக் கொண்டேயிருந்த ஹெக்டே திடீரென்று, ''கமான் க்விக்! அந்த பஸ் வருவதற்குள் கிராஸ் செய்து விடலாம்!'' என்று ஒரு பள்ளிக்கூடச் சிறுவனைப் போல் துள்ளிக் குதித்துக் கொண்டு ரோடைக் கடந்து ஓடினார்!

''இப்போது எதிர்க்கட்சித் தலைவர்களின் மாநாடுகளெல்லாம் என்னவாயிற்று? ஒரு சாதாரண எம். பி. யாக இருந்த போது ராஜீவ் காந்தி ஒருமுறை சென்னை வந்திருந்தார். அப்போது சென்னை விமான நிலையத்தில் நடந்த பத்திரிகையாளர் சந்திப்பில் விஜயவாடாவில் நடக்கவிருந்த எதிர்க்கட்சித் தலைவர்களின் மாநாட்டைப் பற்றிக் கேட்ட போது, அதை ஒரு 'புல்ஜடி' (புஸ் வாணம்') என்று வர்ணித்தார். அதுதான் உண்மையானதுபோல் இருக்கிறதே!''

''உண்மையில், எதிர்க் கட்சித் தலைவர்களெல்லாம் ஒன்றுகூடி என்னவெல்லாம் சாதிக்க வேண்டும் என்று நினைத்தார்களோ, அதை விடப் பல மடங்கு அதிகமாக — அது பற்றிய செய்திகளை மிகைப்படுத்தி விளம்பரப்படுத்தி விட்டதால் அனைவரும் எதிர்க் கட்சித் தலைவர்களின் மாநாடுகளைப் பற்றி ஏராளமாக எதிர்பார்க்க ஆரம்பித்து விட்டார்கள். அந்த எதிர்பார்ப்புகளுக்குத்தான் எங்களால் ஈடு கொடுக்க முடியவில்லை. அதனால்தான் மக்களிடம் அது பற்றியதோர் ஏமாற்றம்ஏற்பட்டுவிட்டது. மற்றபடி, எதிர்க் கட்சித்தலைவர்களின் ஒன்று சேரலில் எந்தப் பிரச்னையும் ஏற்பட்டுவிடவில்லை!''

''ஆனால் அப்படித் தெரியவில்லையே! இப்போது பாரூக் அப்துல்லா இ. காங்கிரஸுடன் நட்பாகப் பழக ஆரம்பித்து விட்டார். என். டி. ஆரும் சரி, நீங்களும் சரி முன்பு போல் அதிக ஆர்வம் காட்டுவது போல் தெரியவில்லையே?''

''பிரச்னைகள் வரும்போது நாங்கள் ஒன்று சேருவோம் என்பதில் சந்தேகமேயில்லை!''

''இ. காங்கிரஸ் அல்லாத தென் பிராந்திய முதல்வர்களின் கூட்டம் பற்றியும் செய்திகளே இல்லையே?''

''இ. காங்கிரஸ் அல்லாத தென் பிராந்திய முதல்வர்கள் மட்டுமல்ல; மற்றவர்களும் ஒன்று சேர வேண்டும். காரணம், டெல்லி நமக்கு வெகுதூரத்தில் இருப்பது மட்டுமல்ல; சில விஷயங்களில் நம்மிடமிருந்து வேறுபட்டும் இருக்கிறது. உதாரணமாக டி.வி.யை எடுத்துக் கொண்டால் அதில் ஒரு சானல் அந்தந்த மாநில அரசுகளின் உபயோகத்திற்

* நடந்து கொண்டே பேட்டி: மகள் சமதா, மனைவி சகுந்தலா, மருமகன் கோபால் ஆகியோருடன்.....





காக்க் கொடுத்துவிட வேண்டும். டீ. வி. மீடியா என்பது மத்திய அரசுக்கு மட்டுமே சொந்தமல்ல! இப்படிப் பல விஷயங்கள்... இவற்றையெல்லாம் ஒன்று சேர்ந்து போராடித்தான் பெற முடியும். அதற்கான முயற்சிகள் நடந்து கொண்டுதான் இருக்கின்றன.''

''கடந்த சுதந்திர தினத்தன்று ஒரு முஸ்லீம் விழாவில் கலந்து கொண்ட நீங்கள் தேசிய ஒருமைப்பாடு பற்றி இந்தியில் ஒரு கவிதை படித்தீர்கள். அப்படிப்பட்ட நீங்கள் முதல்வராக இருக்கும் இங்குதானே கன்னடியர்களுக்கும் தமிழர்களுக்கும் பூசல் நடக்கிறது?''

''இப்போது ஏதும் நடக்கவில்லையே! இனிமேலும் அது நடக்காது என்று உறுதியாகச் சொல்கிறேன்!''

''சாதாரணமாகப் பெங்களூர் வாழ் தமிழர்களுக்கு ஒரு குறை. பெங்களூர் டீ. வி. யில் தமிழ் நிகழ்ச்சிகள் அதிகம் இல்லையே என்பதுதான் அது. முதல்வர் என்னும் முறையில் நீங்கள் ஏன் மத்திய அரசுக்குச் சிபாரிசு செய்யக் கூடாது?''

''இதையொரு குறையாகவே எடுத்துக் கொள்ளக் கூடாது. சென்னையிலும் கன்னடியர்கள் வசிக்கிறார்கள் என்பதற்காகச் சென்னை டீ. வி. யில் கன்னட நிகழ்ச்சிகளை அதிகமாகச் சேர்க்கமுடியுமா என்ன! அதெல்லாம் சாத்தியமேயில்லை!''

''சென்னைக்குக் குடிநீர் வழங்கவிருக்கும் 'தெலுங்கு கங்கா' திட்டத்திற்கு நீங்கள்தான் [...]டுக் கட்டையாக இருக்கிறீர்கள் என்று [...]ன்னை வாழ் மக்கள் நினைக்கிறார்கள். [...]ல் உங்களின் நிலையை ஆணித்தரமாகச் [...]ால்ல முடியுமா?''

''தெலுங்கு கங்கா திட்டத்தின் மூலம் சென்னைக்கு வழங்கவிருக்கும் பதினைந்து டி. எம். சி. தண்ணீரில் எங்களுக்கு எந்தவிதமான ஆட்சேபனையுமில்லை. அதில்பிரச்னை என்றால் நான் அதன் துவக்க விழாவில் கலந்து கொண்டிருப்பேனா! எழுந்துள்ள பிரச்னையெல்லாம் அதன் மூலம் ஆந்திரப் பிரதேசத்தில் நடைபெறப் போகும் நீர்ப் பாசனம் பற்றியதுதான். இதை அனைவரும் உணர்ந்து கொள்ள வேண்டும்!''

''குடி நீருக்காக — மழை பெய்து ஏரி நிரம்ப வேண்டும் என்பதற்காகச் செய்யப்படும் பிரார்த்தனைகளிலெல்லாம் உங்களுக்கு நம்பிக்கை இருக்கிறதா?''

''எனக்கு நம்பிக்கை இருக்கிறதா இல்லையா என்பது முக்கியமே அல்ல. மக்களுக்குக் குடிநீர் வேண்டும். அது பிரார்த்தனையின் மூலமாக வருமென்றால் அதை ஏன் நான் தடுக்க வேண்டும்?''

''காவிரி நதிப் பிரச்னையும் வளர்ந்து கொண்டேதான் போகிறது. அதற்கு ஒரு தீர்வே கிடையாதா?''

''அது பற்றிய பேச்சு வார்த்தைக்குக் கர்நாடக அரசு தனது கதவுகளைத் திறந்தே வைத்திருக்கிறது. தமிழக முதல்வருக்கு ஏற்பட்டிருக்கும் உடல் நிலை காரணமாகத்தான் அது தள்ளிக் கொண்டே போகிறதே தவிர, வேறு காரணங்களுக்காக அல்ல. நாம் அனைவரும் சகோதர சகோதரிகள். நாம் பகிர்ந்து கொள்ள ஏராளமான விஷயங்கள் இருக்கின்றன. நிச்சயம் அனைத்தையும் நாம் பகிர்ந்து கொள்வோம். இதை நான் வெறும் வார்த்தை ஜாலங்களுக்காகச் சொல்லவில்லை. உளப்பூர்வமான அன்போடுதான் சொல்கிறேன்!''

''கடைசியாக இப்போது தமிழ்நாட்டில் கிளம்பியிருக்கும் சோ சம்பந்தப்பட்ட பிரச்னை பற்றி நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''

''அவருக்கு ஏற்படும் பிரச்னைகளை அவராகவே தீர்த்துக் கொள்ளும் வலிமை அவருக்கு உண்டு. அப்படிப்பட்ட சாமர்த்திய சாலிதான் அவர்!''

பேட்டி முடிந்தது. பேட்டி முடிவதற்குச் சற்று முன்பாகவே எங்களோடு வந்து கலந்து கொண்ட தமது குடும்பத்ினரை அறிமுகம் செய்து வைத்தார். ''இவள்தான் என் மனைவி சகுந்தலா. இவள் என் இரண்டாவது மகள் சமதா. இவர் இரண்டாவது மருமகன் கோபால். எனக்கு மொத்தம் மூன்று குழந்தைகள். இரண்டு மகள்; ஒரு மகன். மருமகள் ராஜஸ்தானி. முதல் மருமகன் சிந்தி. இரண்டாவது மருமகனை கோபால் தமிழ் பேசும் பாலக்காட்டு அய்யங்கார். எல்லாமே கலப்புத் திருமணங்கள்!'' என்று சொல்லிவிட்டுச் சிரித்தார் ஹெக்டே.

கடைசியாக அவரிடம் விடை பெற்றுக் கொண்டு திரும்பியபோது, சுமார் இரண்டரை மணி நேரம் போனதே தெரியவில்லை. ஒரேயொரு செக்யூரிட்டி ஆபீஸரைத் தவிர (அவரும் வெகு தூரம் பின் தங்கித்தான் தொடர்கிறார்) வேறு எந்தவிதமான பந்தாக்களுமில்லாமல் ஒரு சாதாரண பிரஜையைப் போல் வாக்கிங் போகும் அந்த முதல்வரிடம்பேட்டிகண்ட உணர்வேஇல்லை. ஏதோ நீண்ட நாள் பிரிந்திருந்த ஒரு நண்பரோடு வாக்கிங் போன உணர்வுதான் — மனம் விட்டுப் பேசிவிட்டு வந்த உணர்வுதான்—இன்னமும் ரீங்காரமிட்டுக் கொண்டிருக்கிறது. உண்மையிலேயே கர்நாடக மக்கள் அதிர்ஷ்டசாலிகள்!

**—இளங்கோவன்**

படங்கள்: **பாபுராஜ்**

அட்டை வண்ணப்படம்: **யோகா**

# பெங்களூர் பட்டா?

# பார்த்து வாங்குங்கள்!

பெங்களூருக்கு வருகை தருபவர்களை சிக்பேட், மெஜஸ்டிக் பகுதிகளில் உள்ள பட்டுப் புடவை விற்பனை நிலையங்கள் ''வாருங்கள் வாருங்கள்'' என்று அழைப்பதை யாராலும் தவிர்க்க முடியாது. அறுபத்தைந்து ரூபாய் முதல் மூந்நூற்றைம்பது ரூபாய் வரை எழுதப்பட்ட விலைப்பட்டியலுடன் கூடிய பட்டுப் புடவைகளை அணிந்த 'ஷோ கேஸ்' பாவைகள் கவர்ச்சியைக் காட்டி உங்களை நிற்க வைக்கும். வாங்கத் தூண்டும்.

* 'ஸ்கும்' செய்யப்பட்டபின் மீண்டும் நெய்வதற்கு பட்டு தயாராகிறது.



* கச்சா பட்டு இழைகளாகப் பிரித்தெடுக்கப்படுகிறது.



புகழ் பெற்ற 'பெங்களூர்சில்க்' என்றழைக்கப்படும் இந்தப் புடவைகளில் பெரும் பகுதி பெங்களூரில் உள்ள கப்பன் பேட்டையில் நெய்யப்படுகின்றன. அந்தப் பகுதியில் வீட்டிற்கு வீடு தறி சப்தத்தைக் கேட்கலாம்.

இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் முக்கியமான பட்டு, பெங்களூரை அடுத்துள்ள சித்தலகட்டா, ராம்நகர், கோலார், கொள்ளேகால் போன்ற நகரங்களிலிருந்து தருவிக்கப்படுகிறது. பட்டுப்பூச்சிக் கூட்டிலிருந்து பிரித்தெடுக்கப்படும் இழைகள் (Raw Silk) மொத்தமாக கர்நாடகா அரசு பட்டு உற்பத்தி கூட்டுறவு வாரியத்திற்கு வந்து சேருகிறது. தேவராஜ் அர்ஸ் முதல்வராக இருந்தபோதுதான் இந்த வாரியம் அமைக்கப்பட்டது. அதற்கு முன்னர் தனி நபர்களிடம் இந்த உரிமை இருந்ததால் இரண்டு மூன்று தறி வைத்து ஜீவனம் செய்யும் நெசவாளர்கள் ஒரு நிர்ணயமான விலை கொடுத்து பட்டு நூலை வாங்க முடியாமல் தவித்துக் கொண்டிருந்தார்கள். இப்போது இந்தக் குறையை இந்த வாரியம் நிவர்த்தி செய்திருக்கிறது. இருப்பினும் தனிப்பட்ட முறையில் எந்த நெசவாளரும் இங்கு நேரிடையாகச் சென்று பட்டு நூலை வாங்கி விட முடியாது. இதில் உறுப்பினராக உள்ளவர்கள்தான் வாங்க முடியும். அவர்களிடமிருந்து சில்லறையாகவோ, மொத்தமாகவோ, மற்ற நெசவாளர்கள் வாங்குகிறார்கள்.

தங்கம், வெள்ளி, பருத்தி போல் இதற்கும் தினசரி விலை நிர்ணயம் உண்டு. ஒரு கிலோ பட்டு சமயத்திற்கேற்றவாறு 550 ரூபாய் முதல் 570 ரூபாய் வரை விற்கப்படுகிறது. ஏலத்தின் மூலம் இந்த விலை நிர்ணயிக்கப்படுகிறது. சீனாவிலிருந்தும் பட்டு தருவிக்கப்படுகிறது. ஒரு கிலோ சீனா சில்க் 600 ரூபாய்.

இப்படி வாங்கப்படும் பட்டு நூலை மெல்லிய இழைகளாக்கி, பிரித்தெடுக்கும் இழைகளை உறுதிப்படுத்த 'ஸ்கமிங்' செய்கிறார்கள். பிறகு வண்ணங்களில் தோய்த்தெடுக்கப்படுகிறது.

அதன் பின்னர்தான் பட்டு நூலிழைகள் தறிக்கு வருகிறது. புடவைகளுக்குத் தேவைப்படும் டிசைன்களை அமைத்துத்தர சில பிரிவுகள் செயல்படுகின்றன. ஒரு புடவைக்கு டிசைன் செய்துதர 400 ரூபாய் வாங்குகிறார்கள். ஒரு டிசைனைத் தறியில் அமைத்துவிட்டால் அதே டிசைனில் ஐம்பது அல்லது அறுபது சேலைகளை வித்தியாசமான வண்ணங்

களில் நெய்வதுண்டு.

அடுத்து புடவையின் பார்டருக்குப் பயன்படுத்தப்படும் ஜரிகை. ஜரிகை இழைகள் சூரத் நகரிலிருந்து வரவழைக்கப்படுகிறது. இதிலும் தரம் வித்தியாசம் உண்டு. விலை குறைவான பட்டுப் புடவைகளில் பயன்படுத்தப்படும் ஜரிகை 70 × 60 என்ற விகிதத்தில் பெரும் பகுதி தாமிரம் கலக்கப்பட்டிருக்கிறது. இது வெகு சீக்கிரத்தில் மங்கிவிடக் கூடியது. விலையுயர்ந்த பட்டுப்புடவைகளின் பார்டருக்குப் பயன்படுத்தப்படும் ஜரிகை இழைகள் 100 × 100 என்ற விகிதத்தில் தங்கமும், வெள்ளியும் கலந்திருக்கும்.

பட்டுத் தறி தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள் பெரும்பாலோர் தேவாங்கா சமூகத்தினர். ஒரு குடும்பத்தில் குறைந்தது இரண்டு தறிகளாவது இருக்கும். வசதி படைத்த சிலர் நான்கு முதல் நாற்பது தறி வரை அமைத்து வேலையாட்களை வைத்து வேலை வாங்குவதும் உண்டு.

பெங்களூரில் மட்டும் சுமார் 25,000 'பவர் லூம்ஸ்கள்' இருப்பதாகக் கூறப்படுகிறது. இதில் ஈடுபட்டுள்ள நெசவுத் தொழிலாளர்களின் எண்ணிக்கை 60000. இருப்பினும் இவர்களுக்காக எந்த தொழிற் சங்கமும் கிடையாது. அமைப்பதற்குத் தொழிலாளர்களிடையே ஒற்றுமையும் இல்லை. அமைக்க வசதி படைத்த முதலாளிகளும் விடுவதில்லை. தறி அமைக்க அரசு தரப்பில் உதவி கிடைப்பதில்லை, பாங்குகள் கடனுதவியும் போதுமானதாக இல்லை என்ற குறைபாடு இவர்களிடத்தில் இருக்கிறது.

தங்களுக்கென்று ஒரு அமைப்பை ஏற்படுத்திக் கொண்டு அதன் மூலமாக விற்பனை நிலையங்களுக்கு அனுப்பும் முறை இவர்களிடம் இல்லை. நெய்யப்படும் புடவைகளின் விலையை கடைக்காரர்கள்தான் நிர்ணயிக்கிறார்கள்.

பெங்களூரில் விற்பனையாகும் பட்டுப் புடவைகளில் கலப்படம் அதிகம் என்ற பரவலான கருத்து உண்டு. தரமான பட்டுப் புடவைகள் நம்பகமான கடைகளில் கிடைக்கிறது. இதில் கலப்படம் ஏதுமில்லை. மிக மிகக் குறைந்த விலைகளில் விற்கப்படும் பட்டுப் புடவைகளில் மருந்துக்குக் கூட பட்டு கிடையாது. மூங்கில் சோற்றிலிருந்து எடுக்கப்படும் இழைகளைக் கொண்டு நெய்யப்படும் இந்தப் புடவைகள் பாலிஷ் செய்யப்பட்ட பின் பட்டுப் புடவைகள் போல் காட்சியளிக்கின்றன.

புகைப்படம், கட்டுரை: **அ. குமார்.**

# அருள்வாக்கு



**ப**ழைய காலத்தில் தர்ம சாசனங்களெல்லாம் கோயில் சுவர்களில் கல்லில் வெட்டப்பட்டிருக்கின்றன. தர்மங்களைப் பதிவு செய்யும் ஸப் ரிஜிஸ்திரார் ஆபீஸ் பழைய நாளில் கோயில்தான். திருவாங்கூர் ஸம்ஸ்தானத்து ராஜ்யாதிகாரிகளுள், திருமந்திர ஓலை என்பவன் ஓர் உத்தியோகஸ்தன். ஸமீப காலம் வரையில் அந்த ராஜ்யத்தில் இந்த உத்தியோகம் இருந்தது. பூர்வத்தில் தமிழ் நாட்டில் எல்லா அரசர்களிடமும் இப்படியொரு அதிகாரி இருந்தான். இந்தக் காலத்தில் ''பிரைவேட் ஸெகரட்ரி'' என்று சொல்கிறார்களே, அந்த மாதிரி. அவன் அரசன் எது சொன்னாலும் அதை எழுதிக் கொள்ள வேண்டும். பின்பு அதை யார் யாருக்கு அனுப்ப வேண்டுமோ அவர்களுக்கு அனுப்ப வேண்டும். அந்தக் காலத்தில் யார் எந்தத் தர்மம் பண்ணினாலும் அதை மகாராஜாவுக்குத் தெரிவிக்க வேண்டும். அவன் அதை ஒத்துக் கொண்டு ஆக்ஞை பண்ணுவான். அந்த ஆக்ஞையைத் திருமந்திர ஓலைக்காரன் எழுதி அனுப்புவான். அப்படி எழுதிக் கடைசியில் 'கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்ளுவதாகவும்' என்று எழுதுவான். அந்த ஆக்ஞை எந்த ஊரில் தர்மம் செய்யப்படுகிறதோ அந்த ஊர் ஸபையாருக்கு அனுப்பப்படும். அவர்கள் அதைக் கோயில் சுவரில் வெட்டச் செய்வார்கள். இதுதான் 'கல்லில் வெட்டிக் கொள்வது' என்பது. அநேகக் கோயில்களிலுள்ள சிலா சாஸனங்கள் இவைதான்.

'செம்பில் வெட்டிக் கொள்வது' என்பது தாமிர சாஸனமாக செப்பேடுகளில் எழுதி, ஓர் ஏட்டுக்கு மேல் போனால் ஓட்டை பண்ணி வளையம் போட்டுக் கோத்து வைப்பதாகும். இதற்கும் உள்ளூர் ஸபையார் அங்கீகாரம் கொடுக்க வேண்டும். இப்படிப்பட்ட செப்பேடுகளும் கோவில்களிலேயே பூமிக்கு அடியிலுள்ள 'க்ஷேமம்' என்கிற (க்ஷேமம் என்றால் பாதுகாப்பு என்றுதானே அர்த்தம்?) இடத்தில் வைக்கப்படும். தேச வாழ்வே ஈசுவரன் கையில் ஒப்பிக்கப்பட்டு, ஆலயம் என்பதே ஒரு நாட்டின் உயிர் நிலையாகக் கருதப்பட்டு வந்ததால் இப்படி அதுவே ரிஜிஸ்திரார் ஆபீஸ், எபிக்ராஃபி ஆபீஸ் எல்லாமாக இருந்தது.

**—ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**



# “ஜனதா ஆட்சியிலும் ஊழல் இருக்கிறது!”

## —லங்கேஷ் கூறுகிறார்

**“லங்கேஷ் ஒரு வித்தியாசமான மனிதர். அவரை அவசியம் சந்தித்துப் பேசுங்கள்” என்று சுஜாதா சொல்லியிருந்தார்.**

நல்ல உயரம். தாட்டியான உருவம். கரகரப்பான குரல். வித்தியாசமான மனிதர் தான் — தோற்றத்தில் மட்டுமல்ல!

“பெயரே கொஞ்சம் வித்தியாசமாய் இருக்கிறதே!” என்றதற்கு, “லங்கேஷ் என்பது கன்னடப் பெயர்தான். என் அப்பா ஒரு விவசாயி. என்னுடைய பிறந்த நட்சத்திரம், ராசி இவற்றையெல்லாம் வைத்து ‘ல’வில் ஆரம்பிக்கிற பெயராய் வைக்க முடிவு செய்து, ‘லங்கேஷ்’ என்று வைத்துவிட்டனர்” என்றார்.

லெக்சரராய்ப் பணியாற்றிய இவருக்கு சினிமா அனுபவம் உண்டு. நாலைந்து படங்களைத் தயாரித்து, டைரக்ட் செய்திருக்கிறார். இவற்றில் இரண்டுக்கு தேசிய விருதுகள். சிறுகதை நாவல்களும் எழுதியுள்ளார்.

“லெக்சரராய் இருந்தபோது, ‘சித்திர குப்தா’ என்கிற கன்னடப் பத்திரிகையில் தொடர்ந்து எழுதிக் கொண்டிருந்தேன். அதன் பிறகு, ‘பிரஜா வாணி’யில் ஒரு ‘காலம்’ எழுதி வந்தேன். அந்தப் பகுதி ரொம்பப் பிரபலமாகிவிட்டது. அதைப்பார்த்து, அந்தப் பத்திரிகையின் ஆசிரியரே பொறாமைப் பட்டார். பத்திரிகையின் உரிமையாளர் என்னைத் தொடர்ந்து எழுதச் சொன்னார். ஆனால், தேவராஜ் அர்ஸ் பதவி இறங்கினதும், அவரைச் சந்தித்துவிட்டு, ஒரு கட்டுரை எழுதினேன். அது பத்திரிகையின் உரிமையாளருக்கே பிடிக்கவில்லை. எனவே சொந்தமாக ஒரு பத்திரிகை ஆரம்பிக்க முடிவு செய்தேன்” என்று சொன்னார்.

“புதுப் பத்திரிகைக்கு ஏன் லங்கேஷ் என்று பெயர் வைத்தீர்கள்?”

“நான் பரபரப்பாக எழுதினதெல்லாம் ‘லங்கேஷ்’ என்கிற என் சொந்தப் பெயரில் தான். அது ரொம்பவும் பாபுலராகி இருந்தது. எனவே புது பத்திரிகைக்கு என் பெயரையே வைத்துவிட்டேன்.”

தொடர்ந்து லங்கேஷ் கூறியவை: “பத்திரிகை தொடங்கின புதுசில், குண்டுராவ் முதலமைச்சர். அப்போதைய காங்கிரஸ் அரசாங்கத்தின் மீது மக்களுக்கு ஒருவித வெறுப்புணர்ச்சி தோன்ற ஆரம்பித்த நேரம். அதை நான் துணிச்சலாய் வெளிப்படுத்தினேன். ‘இந்திராதான் தன்னை முதல்வராக்கினவர். அவரைத் திருப்திப் படுத்தினால் போதும். மக்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்’ என்ற குண்டுராவின் போக்கை நான் வன்மையாய்க் கண்டித்தேன்.

குண்டுராவ் இதற்காக மறைமுகமாய்ப் பல தொல்லைகள் தந்தார். நேரடியாய் தாக்கப்பட்ட அனுபவமும் உண்டு. அதை நடத்தினவர் ‘வட்டல் நாகராஜ்’. சமூக விரோத காரியங்கள் அத்தனையும் செய்கிற ஆசாமி. அரசியல்வாதிகள் யாரும் நாகராஜைத் தட்டிக் கேட்கவில்லை; பத்திரிகைக்காரர்களுக்கும், போலீஸுக்கும் கிட்டே போகவே பயம். லங்கேஷில் வட்டல் நாகராஜின் நடவடிக்கைகள் எல்லாவற்றையும் எக்ஸ்போஸ் பண்ணினோம். அந்த ஆளின் ஆர்ப்பாட்டங்களுக்கு முடிவு கட்டின பெருமை எங்களுக்கு உண்டு. அப்போதுதான் வட்டல் நாகராஜின் தாக்குதலுக்கு ஆளானேன் நான்.”

“சென்ஸேஷனலாக நிறைய வெளிவருமோ உங்கள் பத்திரிகையில்?”

“ஓ! நிறைய! ஒரு பெரிய பட்டியலே தரலாம்! ஆனால் வெறும் ‘சென்ஸேஷ’னுக்காக மட்டும் எதையும் செய்வதில்லை. சமுதாயப் பொறுப்புடன் நடந்து கொள்வோம்.

உதாரணத்துக்கு கர்நாடக பப்ளிக் சர்விஸ் கமிஷன் ஊழலை வெளிப்படுத்தியது. அந்த கமிஷனைச் சேர்ந்த பேராசிரியர் ஒருவரே கமிஷனின் சேர்மன், மற்றும் உறுப்பினர்கள் பண்ணின ஊழல்களை, தக்க ஆதாரங்களுடன் தந்தார். அவர்களின் கதை அதோடு முடிந்தது.''

''அப்போது முதல்வர் யார்?''

''குண்டுராவ் தவிர வேறு யாராக இருக்க முடியும்?

''பெல்லாரி பகுதியில் மட்கா மன்னர்கள், பூட் லெக்கர்ஸ், குண்டர்கள் என அத்தனை சமூக விரோதிகளும் இருந்தது காரணமாய் ரௌடித்தனம் தலைவிரித்தாடியது. இத்தனையும் போலீஸ் ஆதரவுடன். பெல்லாரியின் அக்கிரமங்களைத் துணிச்சலுடன் வெளியே கொண்டு வந்து அதற்கு ஒரு முடிவு கட்டினோம். இன்று பெல்லாரி அமைதியான பகுதி. இது பற்றி நாங்கள் தாராளமாய் மார் தட்டிக் கொள்ளலாம்.''

பத்தாயிரம் பிரதிகளாய் ஆரம்பித்த லங்கேஷ், ஐந்தாண்டுகளில் பல பரபரப்புக்களை ஏற்படுத்தி, விற்பனையில் கிடுகிடுவென ஒன்னேகால் லட்சத்தைத் தொட்டுவிட்டது. கையில் 15,000 ரூபாயுடன் லங்கேஷ் இதை ஆரம்பித்தபோது முதலில் சில வாரங்கள் ரொம்பக் கஷ்டப்பட்டாலும் பின் சமாளித்துக்கொண்டாராம். இன்னோர் விஷயம் பற்றியும் இவர் பெருமையாய்ச் சொல்கிறார். பத்திரிகையில் ஒரு வரிகூட விளம்பரம் வெளியிடுவதில்லை. பக்கத்துக்குப் பக்கம் விஷயம். சராசரி நாளிதழில் பாதி சைஸ். 20 பக்கம். விலை ரூ. 1.75. ''விளம்பரம் போடாததால் வாசகர்கள் அதிக விலையைப் பொருட்படுத்தவில்லை'' என்று விளக்குகிறார்.

ஜனதா ஆட்சி பற்றி இவரது கருத்து என்ன?

''காங்கிரஸை விடத் தேவலாம். குண்டாயிஸம் இல்லை. ஆனால் ஊழல் இருக்கிறது. பாட்லிங் ஊழல் பற்றி எழுதினோம். பார்லிமெண்ட் தேர்தலுக்கே ஒவ்வொரு ஜனதா வேட்பாளரும் ஏழெட்டு லட்சம் செலவழித்தனர். சிலர் இருபது, இருபத்தைந்து லட்சம் கூட செலவு செய்தனர். இவர்களுக்கு இவ்வளவு பணம் எப்படி வந்தது? ஆகாயத்திலிருந்தா? முன்னாள் சுகாதார மந்திரியும், இப்போதைய போக்குவரத்து மந்திரியுமான சிந்தியா லஞ்சம் வாங்குவது குறித்து விவரமாய் லங்கேஷில் வெளி வந்தது. காங்கிரஸ் ஆட்சியின் போது மேல் மட்டத்திலிருந்து, அடி மட்டம் வரை லஞ்சமும், ஊழலும் பரவி இருந்தது. அதே நிர்வாக அமைப்பில் ஆளும் ஜனதா, சீரியஸாய் சிந்தித்து ஏதாவது செய்யாவிட்டால், லஞ்சம், ஊழலை ஒழிப்பது முடியாதகாரியமாகிவிடும்'' என்கிறார் இவர்.

விடைபெறும்போது லங்கேஷ் சொன்ன விஷயம்: ''அரசியல்வாதிகளுடன் நெருங்கிப் பழகக் கூடாது. அந்த நெருக்கம் எழுத்தைக்கட்டுப்படுத்தும். எனவே எந்த அரசியல்வாதியும் எனக்கு நெருங்கின நண்பரில்லை.''

— எஸ். சந்திரமௌலி.

# ஸ்பாட்லைட்

ஆர். எம். வீரப்பனை பூசாரி என்று கூறுகிறார்கள். கோஷம் போடுகிறார்கள். நண்பர் திருநாவுக்கரசு இப்படிக் கூறியிருக்க மாட்டார் என்று நினைக்கிறேன். ஆனால், சூர்ப்பனகைக்கு புரோக்கராக இருப்பதை விட இராமனுக்கு பூசாரியாக இருப்பது மேல்!

— அமைச்சர் காளிமுத்து.



டெல்லியில் பிரதமர் ராஜீவ் காந்தி குண்டு துளைக்காத கூண்டுக்குள் இருந்து சுதந்திர தின உரையாற்றினார். இந்தியா முழுமையாகச் சுதந்திரம் அடைந்தாலும், இன்னும் ராஜீவ் காந்தி சுதந்திரம் அடையவில்லை.

— பேராசிரியர் அன்பழகன்.

தூத்துக்குடிக்கு அருகில் ஒருமுறை கார் ரிப்பேருக்காகக் காத்திருந்தபோது, 'நீங்க யாரு? எம். ஜி. ஆர். கட்சி ஆளா? அவருக்கு நீங்கள் என்ன வேண்டும்?' என்று காருக்குள்ளிருந்த அண்ணாவைப் பார்த்து ஒருவன் கேட்டான். அதற்கு அண்ணாவும் பொறுமையாக, 'என் பெயர் அண்ணாதுரை — நான் எம். ஜி. ஆரோட அண்ணன்!' என்றார். 'அப்படியா!' என்று வியந்த அந்த மக்கள் அதற்குப் பிறகுதான் இளநீர் வெட்டித் தந்து அண்ணாவை உபசரித்தார்கள்.

— முசிறிப்புத்தன்.

ஈழத் தமிழர்கள் வாழ்வு பற்றி எரியும் போது — பிடி சாம்பலாக மாறிக் கொண்டிருக்கும்போது தமிழக முதல்வருக்கு 'டிஸ்னி லேண்ட்' காட்சி ஒரு கேடா? விரைந்து வா! டெல்லிக்குப் பறந்து போ! புதிய பூகோளத்தின் வரைபடம் உருவாகட்டும்! வழி செய்!

— நாஞ்சில் மனோகரன்.

காளி நதி மின் திட்டம்

# வெற்றி இயல் சாதனைக்கு

வட கன்னட மாவட்டத்தில் மேற்குத் தொடர்ச்சிமலையிலெங்கேயோஓடிக்கொண்டிருக்கிறதுகாளி நதி. இதைஅங்கங்கேபிடித்து நிறுத்தி ஆரத்தி எடுத்து வேலை வாங்குவதில் பெரிதும் வெற்றியடைந்து விட்டார்கள் கர்நாடகாக்காரர்கள். வெறுமனே மலை முகடுகளில் துள்ளிக் குதித்து ஓடிவருகிற அலங்கார தேவதையாகவே காலங்காலமாக விளங்கி வந்தவள் இந்தக் காளி.

இவளை உபசாரம்பண்ணி வேலைவாங்குவதற்கு மிகவும் சாமர்த்தியம் வேண்டும். கடல் மட்டத்துக்கு மேல் 915 மீட்டர் உயரத்தில் பிறந்து ஒரு மாவட்டத்துக்கு உள்ளேயே மங்கலச் சரடாய் வளைய வந்து கார்வார் கடலில் முடிந்து போகிற கன்னி ஆறு இந்தக் காளி.

பாதை தெரியாத தேக்கு மரக் காட்டில், ஆளுயரக் கறையான் புற்றுக்களையும், காட்டு விலங்குகளையும் லட்சியம் பண்ணாமல், கட்டுக் கட்டாய்க் காகிதங்களுடனும், பென்சில்களுடனும் சர்வே கருவிகளுடனும் புறப்பட்டுப் போய் வரைபடம் தயாரித்தார்களே, அவர்களின் துணிச்சலை இன்றைக்கு நினைத்து நினைத்துப் பெருமைப்பட வேண்டும்.

மூன்று கட்டங்களில் ராட்சத நீர்மின் திட்டத்தை முடிக்கலாம் என்று வரையறை செய்து கொண்டார்கள். அடுத்த ஆண்டுத் தொடக்கத்தில் நிறைவடையப் போகிற முதல் கட்டப் பணி, கர்நாடகமாநிலத்துக்குக் கூடுதலாய் 9.10 லட்சம் கிலோவாட் மின் உற்பத்தித் திறனை நல்கும்.

நில ஆர்ஜிதம் செய்தது, கிராமத்து மக்களை வேறிடங்களில் குடியமர்த்தியது, கன்னி கழியாத மலைக்காட்டில் வழுவழுவென்று சாலைகள் போட்டது (சுமார் 200 கி. மீ. தூரம்) எல்லாச் செலவுகளும் உட்பட இந்த மின் திட்டத்துக்காகக் கடந்த ஆண்டு இறுதி வரை 305 கோடி ரூபாய் செலவு.

'ஸூபா என்றொரு நகரம் இருந்தது' என்று இப்போது சொல்ல வேண்டும். இப்போது இந்த நகரம் தண்ணீருக்கு அடியில் நூறு அடி ஆழத்தில் உறங்கிக் கொண்டிருக்கிறது. சிறியதும் பெரியதுமான நாற்பத்தேழு கிராமங்களைத் தன்னுடைய மணி வயிற்றில் சுமந்து கொண்டு, காளி நதி மேலே ஓட முடியாமல் தடுத்து நிறுத்தப்பட்டு விட்டாள்.

முழுவதும் கான்கிரீட்டினால் ஆன 101 மீட்டர் உயரமுள்ள ஸூபா அணைக்கட்டு வேலை நிறைவடையும் தறுவாயில் உள்ளது. காளி நதித் திட்டத்திலேயே இந்த ஸூபா அணைதான் மிக முக்கியமான பகுதி. 129 சதுரகிலோமீட்டர்பரப்பில்.435மில்லியன் கன மீட்டர் தண்ணீரைத் தேக்கி வைத்துக் கொள்ளக் கூடிய திறன் வாய்ந்ததாக இதை உருவாக்கி வருகிறார்கள்.

ஸூபா நகரப் பகுதியில் இருந்த மூவாயிரம் குடும்பங்களை பத்திரமாக ராம் நகர் என்ற நவீன கிராமத்தில் அவர்களுடைய உடைமைகளுடன் குடியமர்த்தியிருக்கிறார்கள். வீடு, நிலம் வைத்திருந்தவர்களுக்கும், சொத்து ஏதுமே இல்லாதவர்களுக்கும் கூட இந்தப் புது நகரத்தில் இடம் ஒதுக்கித் தந்திருக்கிறார்கள். நஷ்ட ஈடு தந்ததோடு தங்கள் பழைய வீடுகளின் மரங்கள், ஓடுகள், செங்கல்கள் என்று எவையெவை வேண்டுமோ அவ்வளவையும் பிரித்து எடுத்துக் கொண்டு புதிய இடத்தில் குடியேற லாரிகளை நிர்வாகத்தின் செலவில் ஏற்பாடு செய்து தந்திருக்கிறார்கள். மாடு கன்றுகள் தவிர, வைக்கோல், சாண எரு என்று எவையெல்லாம் தேவை என்று சொன்னார்களோ அவ்வளவையும் லாரிகள் கொண்டு வந்து சேர்த்திருக்கின்றன. ராம் நகரில், ராமலிங்கேசுவரர் கோவில் ஒன்றையும், மசூதி ஒன்றையும், மாதா கோவில் ஒன்றையும் புதிதாகக் கட்டித் தந்திருக்கிறார்கள். பள்ளிகள், மருத்துவமனை எல்லாம்தான்!

தாலுகா தலைமையிடமாக இருந்த ஸூபா நகரம் இப்போது அணைக் கட்டாகி விட்டது. மண்ணின் மீதான பாசம் என்பதை யாரா

# மகத்தான எடுத்துக்காட்டு!

லும் அளவிட முடியாது. கோடி கோடியாய்ப் பொன் கொடுத்தாலும் பரம்பரையாய் ஆண்டு அனுபவித்து வந்த பாசம் போகுமா? 'இங்கேதான் அப்பா படித்தார்... இங்கு தான் தாத்தா பயிர் பச்சை போட்டிருந்தார்... இந்த வீட்டில்தான் நான் விளையாடினேன்...'

இந்த உணர்ச்சி ஒரு பரிசு நாவலையே உருவாக்கியிருக்கிறது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! ஷராவதி மின் நிலையம் உருவான போது இப்படித்தான் ஒரு பகுதி மக்களை வேறு இடத்தில் குடியமர்த்த வேண்டியிருந்தது. ஷராவதி திட்டத்தில் சாதாரண குமாஸ்தாவாக இருந்தவர் டிசௌஸா என்பவர். சொந்த பூமியை விட்டு அப்புறப் படுத்தப்பட்ட மக்களுடன் உரையாடி, அவர்களின் மனவேதனையை உணர்ந்து ஒரு நாவல் எழுதினார்: 'பிடுகடே' (விட்டுவிடு) என்ற அந்தக் கன்னட நாவல், சுதா வார இதழில் வெளி வந்து பின்னர் நூலாகவும் வந்தது-பத்தாயிரம் ரூபாய் பரிசு பெற்றது!

முழுக்க முழுக்க இந்தியாவில் தயாரான கருவிகளே காளி நதி மின் திட்டத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன என்பது ஒரு கூடுதலான பெருமை. இந்தக் காளி நதியோடு பண்டாரி, கானேரி, பார்ச்சி, தட்டிஹல்லா, வாக்கி என்று ஐந்து உப நதிகள் வேறு வந்து சேர்ந்து கொள்கின்றன.

ஆற்றுப் பாதையில், மொத்தம் பத்து அணைக்கட்டுகளுக்குத் திட்டமிட்டிருக்கிறார்கள்! ஸூபா அணைப் பகுதியிலேயே இரண்டு மின் உற்பத்தி யூனிட்டுகளில் 100 மெ. வா. மின்சாரம் கிடைக்கிறது. அடுத்து தாண்டேலியில்மறுபடியும்காளியைத்தேக்கி அணை கட்டி சின்னதாக இரண்டு மின் உற்பத்தி யூனிட்டுகள். (50 மெ. வா.) இப்படியாகத் திட்டம் விரிவடைகிறது.

பொம்மனஹள்ளியில் ஆற்றைத் திசை திருப்பி மலையைக்குடைந்து 9.5 கிலோமீட்டர் நீளத்துக்குக் குகைப்பாதை அமைத்துக் கீழே கொண்டு வருகிறார்கள். அதோடு தீர்ந்ததா?

குகைப்பாதை முடிவில் ஸர்ஜ் டாங்க் என்கிற நீர்ப்பிடிப்புத் தொட்டியை அமைத்து, அங்கிருந்து மூன்றாய்ப் பிரிகிற சரிவான சுரங்கக் குழாய்களை மறுபடி வெட்டியிருக்கிறார்கள். 50 டிகிரி சரிவான இந்தச் சுரங்கப் பாதைகளைக் கீழேயிருந்து மேல் நோக்கித் தோண்டியிருப்பது அசுர சாதனை. இதற்குமட்டும்ஸ்வீடன்தயாரிப்பானகுடைவு கருவி பயன்பட்டிருக்கிறது. சுரங்கப்பாதையின் உட்புறம் அழுத்தமான எஃகு குழாய்களால் லைனிங் கொடுக்கப்பட்டிருக்கிறது. சரிவான குகைகளின் வழியே படுவேகமாகப் பாய்ந்து வருகிற தண்ணீரை மறுபடியும் ஆறு சமதளக் குழாய்களில் பாய விட்டு அதன் ஆறு முனைகளிலும் மின் உற்பத்தி யூனிட்டுகளை அமைத்திருக்கிறார்கள். இந்த ஆறு யூனிட்டுகளின் மொத்த மின் உற்பத்தித் திறன் 810 மெ. வா.

காளி நதியின் ஒரு சொட்டுத் தண்ணீரைக் கூட வீணாக்காமல் கட்டிப் போட்டு வேலை வாங்குகிற மனித ஆற்றலை வியக்காமலிருக்க முடியவில்லை.

இது மராட்டி மொழி பேசப்படுகிற பகுதியாக அமைந்திருக்கிறது. அம்மொழியில் காலி என்றால் கறுப்பு என்று பொருள். இந்தக் காளி நதியின் நீரும் கறுப்பாக ஓடுகிறது. பக்கத்தில் வந்து சேர்ந்து கொள்கிற பண்டாரி நதி நீர் வெண்மையானது. பண்டாரி என்றால் வெள்ளை என்று பொருளாம். கறுப்பாக இருப்பதால்தான் சக்திக்கும் காளி தேவி என்று பெயர் வந்ததோ?

எப்படியோ, இந்த மின்சக்திப் புரட்சி பொறியியல் சாதனைக்கு மகத்தான எடுத்துக் காட்டாக விளங்குகிறது.

— சுப்ரபாலன்,

சாருகேசி.

# எச்எம்டி கைகடிகாரங்கள்.

## மூன்றுகோடி முறைகளுக்கு மேலாக தரம் சோதிக்கப்பட்டவை



**எச்எம்டி அணிந்திருக்கும் ஒருவரைக் கேளுங்கள் — அவர்கள் மூன்றுகோடிக்கும் மேல் இருக்கிறார்கள்!**

தரத்தை நிலைநிறுத்தியுள்ள கைகடிகாரங்கள் எச்எம்டி. இதை உபயோகிக்கும் மூன்று கோடிக்கும் மேலான மக்கள் இன்று உத்தரவாதத்துடன் கூறுவது இதையே. இன்னும் என்ன வேண்டும்? உபயோகிக்கும் ஒவ்வொருவரும் இதனுடைய தரத்திற்கு நற்சான்று பகர்ந்துள்ளனர்.

நாடு முழுவதும் நற்பெயரை எச்எம்டி கைகடிகாரங்கள் பெற்றிருப்பதின் ரகசியம்தான் என்ன?

இதனை வாங்குவோர், மிகச் சிறந்ததை பெறவேண்டும் என்ற எண்ணத்தோடு, கடுமையான தரக்கட்டுப்பாட்டுக்குடன்பட்டு உருவாக்கப்பட்டுள்ளன. இந்த உறுதியில் நாங்கள் தளராது கடந்த 20 ஆண்டுகளாக பணியாற்றுகிறோம். மூலப் பொருளிலிருந்து முடிவு பெறும்வரை, ஒவ்வொரு நிலையிலும் கடுமையான தரக் கட்டுப்பாடை அளிப்பது என்ற உறுதிமொழியை தொடர்ந்து காப்பாற்றி வருகிறோம்.

உத்தரவாதம் கொடுக்கப்பட்ட தரமுடைய கைகடிகாரங்கள் எச்எம்டி. மூன்று கோடி மக்களின் வாக்கு தவறாக இருக்கமுடியாது.

**hmt கைகடிகாரங்கள்**

**சோதனை வென்று சாதனை படைத்தல் — அதுதான் உத்தரவாதம்**

வாட்ச் டிவிஷன்
hmt
நாட்டுக்கு நல்ல நேரம் காட்டுவோர்



CLARION/HMT/8537/Tam



# குலத்தைக் காக்க குதிரை ஏறி வந்தாள்!

**கன்னட நாட்டுப்புறப் பாடல்கள்**

கன்னட நாட்டுப்புற பாடல்களை முதலில் 1802 இல் ஜான்லெய்டன் எனும்ஸ்காட்லாண்டுகாரர்தான் தொகுத்ததாகத் தெரிகிறது! பின்னர் தொகுத்த பலரும் மேல்நாட்டவரே. பலகாலம்சென்றுதான் ஆனந்த கிருஷ்ண ஐயர் தனது The Mysore tribes and Castes என்ற நூலையும், வெங்கடேச ஐயங்கார் Folk songs in the Karnataka என்ற நூலையும் எழுதினர். அப்புறம் பலர்.

இன்று கர்நாடகத்தில் பல்கலைக் கழகங்களும் ஆசிரியர்களும் மட்டுமல்லாமல் மாணவர்களும் பாடல்களைச் சேகரித்து வருகின்றனர். பல்கலைக் கழகங்கள் அவற்றைப் பதிப்பித்து வெளியிட்டுள்ளன.

**கித்தூர் ராணி சன்னம்மாள்:**

19 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆங்கிலேயர் வாரிசில்லாத அரச குடும்பங்கள் தங்கள் ராஜ்யத்தைக் கும்பெனியாரிடம் ஒப்படைத்துவிட வேண்டும் என்று அநியாயச் சட்டம் பிறப்பித்தார்கள்.

தார்வார் பகுதியில் கித்தூர் சன்னம்மா கணவனை இழந்தவள், வாரிசும் இல்லாதவள். உத்தரவை உதறித் தள்ளினாள். அவளைத் தாக்கரே தாக்கி 1824 ல் தோற்றுப் போனான். சோப்ளின் மீண்டும் படையெடுத்து வந்து வென்றான்.

ராணி சன்னம்மாள் சிறையில் 6 ஆண்டுகள் வாசம் செய்து மாண்டாள். மக்கள் இவளை வீரத் தேவதையாகவும் வெற்றித் திலகமாகவும் எண்ணுகின்றனர். இவள் பேரில் எண்ணற்ற நாட்டுப்புறப் பாடல்கள்,

''அஞ்ஞாத ராணியார் சன்னம்மாளும்
ஆயுதம் தாங்கியே வந்துவிட்டார்.
குலத்தைக் காக்கவே சன்னம்மாளும்
குதிரை ஏறியே வந்துவிட்டார்
உலகம் காக்கவே சன்னம்மாளும்
உடைவாள் ஏந்தியே வந்துவிட்டார்.
கன்னட நாட்டினைக் காப்பதற்கே
கத்தி ஏந்தியே வந்துவிட்டார்.''

என்பது போன்ற பாடல்கள் ஏராளம். ராணி சிறையில் மடிந்து போனாள். மக்களின் சிந்தனையில் மடியவில்லை — மடியப் போவதுமில்லை.

**மாவரைக்கும் பாடல்கள்:**

கன்னட மக்களின் முக்கிய உணவு ராகி. இது ஏழைகள் உணவு மட்டுமல்ல. எல்லாத் தரத்தாரும் விரும்பும் உணவு. ராகியை மாவாக அரைத்தே பயன்படுத்த முடியும். எனவே, மாவரைப்பது என்பது, வீடு தோறும் தவிர்க்க முடியாத வேலை. திரிகையில் அரைக்கும்போது களைப்புத் தோன்றாமல் இருக்கப் பாடும் பாடல்கள் உண்டு.

இப்பாடல்கள் இறைவனையே இணைக்கும் தன்மையன. சக்குபாய் இப்படி பாடித்தான் பாண்டுரங்களை வரவழைத்தாராம்.

திரிகைப் பாடல்களுள் ஒன்று:

''வெள்ளிக் கிழமையில் சுருளிபோளி
செய்து
சிவனுக்குப் படைத்து வேண்டினேன்
என் கணவருக்கு முன் நான்
சொர்க்கம் போக வேண்டுமென்று.''

பூவும் பொட்டோடும் சுமங்கலியாகச் சாகும் சுகமான ஆசைகளை இவ்வரிகள் வருணனை செய்கின்றன. இதற்காகப் படையல் — சிவனுக்கு. சொர்க்கப் பதவிக்குச் சுருளிப் போளி நிவேதனம்!

**கும்மி:**

திரிகைப் பாடல்கள் தவிர மாமியார் — மருமகள் பாடல், அண்ணன் — தங்கை பாடல், தாலாட்டுப் பாடல், விளையாட்டுப் பாடல் எல்லாம் உண்டு.

தமிழ் நாட்டினைப் போலவே இங்கேயும் பெண்கள் வட்டமிட்டுநின்றுவளைக்கரங்கள் தாளமொலிக்க கும்மி கொட்டுகிறார்கள்

''உதிர் உதிர் மல்லிகை
உதிராதிரு மல்லிகை
உதிர வேண்டுமானால் — சிவனார்
பாதம் சேர் மல்லிகை.''

எவ்வளவு பெரிய தத்துவம். எதுவும் படிக்காதஏழைப்பெண்கள்தேவரகசியத்தையே தெரிவித்துவிட்டார்களே!

இவ்வாறு ஆயிரமாயிரம் பாடல்கள் இந்தக் கன்னட மண்ணில் கஸ்தூரியாய்க் கமழ்கின்றன.

— டாக்டர் சு. சண்முகசுந்தரம்



கல்கி

1985 செப்டம்பர் 1
மலர்: 44 இதழ்: 5
குரோதன ஆவணி 16



# லோங்கோவால் மறைந்தார்; அவர் வீரம் வாழ்கிறது!

தர்மத்தின் வாழ்வதனைச் சூது கவ்வியது மட்டுமல்ல, கடித்துக் குதறிக் கொன்றே விட்டது!

'அடச்சீ! அற்பப் பதர்களா! கொலைகாரர்களைவிடக் கேவலமான கோழைகளா!' என்றுதான் இந்தப் பயங்கரவாதிகளை ஏசத் தோன்றுகிறது. ஆயுதங்களை மறைத்து எடுத்து வந்து, நண்பனைப் போல் நடித்து, நெருங்கி வந்து, படுகொலை செய்துவிட்டுத் தப்பி ஓடப் பார்ப்பதும் ஒரு வீரமா? சீக்கிய மதம் இதையா போதிக்கிறது? சீக்கிய மதகுருமார்கள் இதையா உபதேசித்தார்கள்? முன் உதாரணமாய்த் திகழ்ந்த ரஞ்சித் சிங் போன்ற சீக்கிய மாவீரர்கள் இப்படியா நடந்து கொண்டார்கள்?

இவ்வாறு படுகொலை செய்யப்படலாம் என்பதை உணர்ந்திருந்தும், சற்றும் அஞ்சாமல், அமைதிக்காகப் பாடுபட்டு, அதே நேரத்தில் சீக்கிய மக்களின் நலனுக்காகப் போராடி, பல வெற்றிகளைக் கண்டு, அந்த வெற்றிகளை ராஜீவ் காந்தியுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டதன் மூலம் சாசனமாக்கினாரே, லோங்கோவால், அதுவல்லவா வீரம்! லோங்கோவால் மறைந்துவிட்டாலும் அந்த வீரத்துக்கு அழிவில்லை. அது என்றும் வாழும். பாரதத்தின் ஒருமைப்பாட்டுக்காகவும் ஜனநாயகம் பஞ்சாபில் தழைக்க வேண்டும் என்பதற்காகவும் அவர் செய்த உயிர்த் தியாகம் நிச்சயம் வெற்றி பெறும். அராஜக வன்முறைகள் படு தோல்வி அடையும்.

ஒரு சில பயங்கரவாதிகளுக்குப் பயந்து ஜனநாயகம் அடி பணியக் கூடாது. பஞ்சாபில் தேர்தல்கள் நடந்தே தீரும். அங்கு ஜனாதிபதி ஆட்சி இனியும் நீடிக்க வேண்டும் எனில் அரசியல் சாசனத்தையே மாற்ற வேண்டி வரும். அதற்கு அவசியம் நேராது.

இந்தத் தேர்தலில் மக்கள் இ. காங்கிரஸுக்கு வோட்டுப் போட்டாலும் சரி, அல்லது அகாலிதளத்தின் லோங்கோவால் பிரிவினருக்கு வோட்டுப் போட்டாலும் சரி, அது தேசிய ஒருமைப்பாட்டுக்கும், ஜனநாயகத்துக்கும் விழுந்த வோட்டாக விளங்கும். இரு தரப்பில் யார் வென்றாலும் சரி, அது ராஜீவ் — லோங்கோவால் ஒப்பந்தத்தின் வெற்றியாகத் திகழும். அதோடு, இந்தத் தேர்தலே பயங்கரவாதத்துக்கு அடித்த சாவு மணியாகவும் ஒலிக்கும்.

தேர்தல் பிரசாரங்களின்போது, உணர்ச்சிக் கொந்தளிப்புகளுக்கு அவசியமில்லை என்பதை ஜனநாயகப் பற்றுள்ளவர்கள் உணர வேண்டும். பழைய மனக் கசப்புக்களை மறந்து, அடியோடு பிரசாரங்களிலிருந்து அவற்றை ஒதுக்கிவிட வேண்டும். இந்தத் தேர்தல் பயங்கரவாதத்தை ஒழித்து, ஜனநாயக மறுமலர்ச்சிக்காகவும், பாரதத்தின் ஒருமைப்பாட்டுக்காகவும் நடக்கும் தேர்தல் என்பதையே முக்கியமாக எல்லாத் தரப்பினரும் மேடையேறி வலியுறுத்த வேண்டும். தேர்தல் பிரசாரங்களின்போது கட்சிகள் தத்தமது கொள்கை விளக்கங்களோடு நிறுத்திக் கொண்டு அந்தக் கொள்கைகள் அடிப்படையில் மட்டுமே வோட்டுக்களை மக்களிடம் கோர வேண்டும். ஒரு சர்வ கட்சிக் கூட்டம் நடத்தி ராஜீவ் இந்த வாக்குறுதியை அனைவரிடமும் பெறுவாரேயானால், அத்துடன் மக்கள் அஞ்சாமல் வோட்டுப் போட முன் வரத் தக்க பாதுகாப்பும் தரப்படுமேயானால் —

தர்மம் மீண்டும் வெல்லும். உறுதி.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

# உமது காமிராவுக்குப் பசி எடுக்கவில்லையா?

### கேரளாவின் 'ஸ்பெஷல் ஸீன்'!

* கர்நாடகா சிறப்பிதழின் நிறைய புகைப்படங்களை எதிர்பார்த்தேன். ஏமாற்றிவிட்டீர்கள். உங்கள் நிருபரின் காமெராவுக்குப் பசி எடுக்கவில்லையா? மற்றபடி இந்த இதழ் ஓ. கே.

தர்மபுரி. விந்யா.

* கர்நாடகா சிறப்பிதழில் கேரளாவின் 'ஸ்பெஷல் ஸீன்' மற்ற எல்லாவற்றையும் விட மனத்தைப் பாதித்து விட்டது.

அரகண்டநல்லூர். ஆர். விஜி.

* அமுதவன் கட்டுரை அற்புதம். பெங்களூர்த் தமிழனை நன்றாக அடையாளம் காட்டியுள்ளார்.

சென்னை—1. லிங்கி ஜி. அகமது.

* கர்நாடகச் சிறப்பிதழில் நான் எழுதிய மிஸ்டர் பெங்களூர்த் தமிழர் கட்டுரையில் இரண்டு தங்கவயல் தமிழர்கள் பேசிக் கொள்வதாக வந்திருக்கும் பகுதி தங்கவயல் தமிழ் அன்பர்கள் சிலரின் மனத்தைப் புண்படுத்துவதாக அறிகிறேன். அவர்களை நையாண்டியோ கேலியோ செய்யும் நோக்கம் நிச்சயமாக இல்லை. தங்கவயல் தமிழர்கள் கடும் உழைப்பிற்குப் பேர் போனவர்கள். இன உணர்வுப் போராட்டங்களில் உயிரைத் துச்சமாய் மதித்துப் போராடினவர்கள். இதுபற்றியெல்லாம் ஏற்கெனவே நான் தமிழ்ப் பத்திரிகைகளில் கட்டுரைகள் எழுதியிருக்கிறேன். ஆகவே இழிவுபடுத்தும் நோக்கம் எனக்கு இருக்க முடியாது.

தமிழ்ப் பேச்சு வழக்கு தமிழ்நாட்டிலேயே கூட மாவட்டத்துக்கு மாவட்டம் வேறுபடுகிறது. பெங்களூரிலும் வேறுபடுகிறது. அப்படி வேறுபட்டிருக்கும் வார்த்தைகளைப் பொதுவாகக்குறிப்பிட்டிருந்தால்பிரச்னைக்குஇடமில்லை. அவை அவ்வளவையும் ஒரே உரையாடலில் அடக்கி— காட்சி மாதிரி எழுதி அதை இரு தங்கவயல் தமிழர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள் என்று எழுதியது தான் தவறு. வருந்துகிறேன்.

பெங்களூர். அமுதவன்.

* 'பெங்களூர் 1985' மூலம் ஆதவன் கர்நாடகத் தலைநகரைக் கண்முன் நிறுத்திவிட்டார்.

சென்னை—4. மயிலை. கோபி

* குதுரேமுக்கில் இரும்பு கிடைக்கிறதோ இல்லையோ சுஜாதா மூலம் அருமையான கட்டுரை கிடைத்தது.

விழுப்புரம். கே. எஸ். குமார்.

### மக்களின் கருத்தே.....

* 18.8.85 இதழ்த் தலையங்கம் படுஜோர். நான்கே வரிகளில் நறுக்குத் தெரித்தாற்போல் நீங்கள் முதல்வர் எப்படிச் செயல்பட வேண்டும் என்று கூறியிருப்பது பெரும்பான்மை மக்களின் கருத்தாக இருக்கும்.

சேலம்—1. ருக்மணி சண்முகம்.

* ''தாமதத்தின் மறுபெயர் தமிழக அரசு'' என்ற தலையங்கம் படித்தேன். சென்னை உயர்நீதி மன்றத்தில் மட்டுமல்ல, தமிழ்நாட்டில் நூறு இடங்களுக்குமேல் இன்னும் நீதிபதி நியமிக்கப்படவில்லையென்று தெரிகிறது. அதில் மன்னார்குடியும் ஒன்று. ஆறு மாதமாக வழக்குகள் தேங்குவது மட்டுமல்ல, வக்கீல்களும் வருமானமில்லாது அவதிப்படுகின்றனர்.

மன்னார்குடி. ஸரஸ்வதி ஜெயராமன்.

### நெஞ்சு கனத்துப் போனது

* 'நெஞ்சில் ஆசை கோடி சுமந்து...' அருமையான, பொருத்தமான தலைப்பு. இரா. செல்வகணபதிரமணியத்துக்கு மனமார்ந்த பாராட்டுக்கள்.

பாபநாசம். பாலா. இரவீந்திரன்.

* மூன்றாம் பரிசுக் கதை 'நெஞ்சில் ஆசை கோடி சுமந்து' என் நெஞ்சைக் கனக்கச் செய்து விட்டது. ரொம்ப நேரத்துக்கு வேறு சிந்தனையே ஓடவில்லை.

சென்னை—58. வி. சுவாமிநாதன்.

### விலை கூறுவது விவேகமல்ல!

* கடந்த நான்காண்டுகளுக்கு முன்னர்தான் சுமார் பத்தாயிரம் ஆசிரியர்கள் சிறை சென்று போராடி, ஊராட்சி ஒன்றிய நிர்வாகத்திலிருந்து கல்வித்துறைக்குத் தங்களை மாற்றிடச் செய்தார்கள். ஊராட்சி ஒன்றிய நிர்வாகத்தில் ஏற்பட்ட அநீதிகளும், அடக்குமுறைகளுமே ஆரம்பப்பள்ளி ஆசிரியர்களைப் போராடச் செய்தது. இப்போது மீண்டும் அவர்களைக் கல்வித் துறையிலிருந்து ஒன்றிய நிர்வாகத்திற்கு மாற்ற அரசு ஆவன செய்து வருகிறது. இது மிகவும் வருந்தத்தக்கது. கல்வி கற்கும் ஆசிரியர்கள் கல்வித்துறையில் இருப்பதுதான் சரியானது. அமைச்சர் பெருமக்கள் தங்களது இலாகாக்களை விருத்தி செய்து கொள்ள இடும் போட்டிகளிலும், சண்டைகளிலும் ஆசிரியர்களை விலை கூறுவது விவேகமானதல்ல. அமைச்சர்களுக்கும் இது அழகல்ல!

க.க. சாலை, கோவை. வெள்ளலூரான்.

(கடைசிக் கடிதம் பரிசு பெறுகிறது.)






# பிலிப்ஸ்

## உங்கள் 'செவி இன்பத்திற்கு' மட்டும்.

## பிலிப்ஸ்®
## ஸவுண்ட்® அரவுண்ட்®




**உங்களது பாக்கெட்டுக்குள் அடங்கும் அழகிய சிறிய ட்ரான்ஸிஸ்டர், விலையும் அதிகமில்லை, போகுமிடமெல்லாம் எடுத்துச்செல்ல வசதியானது.**

இப்போது மற்றவர்களுக்கு இடைஞ்சல் இல்லாமல் எவ்வளவு பெரிதாக வேண்டுமானாலும் வைத்துக் கேட்டு மகிழ ஒரு ரேடியோ—பிலிப்ஸ் ஸவுண்ட் அரவுண்ட். காரணம் இதன் ஹெட் ஃபோன்கள் மூலம் இசையைக் கேட்டு மகிழலாம். வெகு நேர்த்தியான ஒலியின் தரம் வழங்குவதுடன் மட்டுமின்றி, குறைந்த பவரிலேயே இது இயங்குவதால், பாட்டரிகள் நெடுநாட்களுக்கு உழைக்கின்றன.

உங்கள் பெல்ட்டில் சொருகியோ, தோளில் மாட்டிக்கொண்டோ எங்கும் எடுத்துச் செல்ல வசதியான கேஸில் பிலிப்ஸ் ஸவுண்ட் அரவுண்ட் கிடைக்கிறது.

அனைத்திற்கும் மேல், தன்னை மறந்த இசையுலகிலிருந்து மீண்டும் இவ்வுலகத்திற்கு வரவேண்டுமென்றால் வெகு எளிது. ஹெட் ஃபோனின் ப்ளக்கை எடுத்து விடுங்கள். வழக்கமான ட்ரான்ஸிஸ்டர்கள் போல் ஸவுண்ட் அரவுண்டில் அனைவருடனும் இசை கேட்டு இன்புறலாம்.

கேட்டுப்பார்த்தால் தெரியும், காதில் மாட்டிக் கொள்ளத் தோன்றும்.

**பிலிப்ஸ்—ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்**

CLARION/B/P/105/203

# சித்தரஞ்சனி

**முன்கதை**

**சா**தவாகன அரசன் கௌதமிபுத்ர சதகர்ணி தன் முதாதையர்கள் காலத்துப் பேரரசை மீண்டும் நிறுவும் லட்சியம் கொண்டவன். தாய் ராஜமாதா பாலஸ்ரீயின் ஆணையின் பேரில் படையெடுப்பை ஆரம்பிப்பதற்கு முன்னால் தாபிலேசுவரர் துறைமுகத்துப் பாதாளக் கோயிலில் சண்டிகா தேவியையும், மலை மீது கோயில் கொண்டுள்ள தாபிலேசுவரரையும் தரிசிக்கப் புறப்படுகிறான். சித்தரஞ்சனி என்ற மோகினிப் பேய் தாபிலேசுவர் அருகே மலைக்காட்டில் உலவுவதாக எச்சரித்து மகனை அனுப்பி வைக்கிறாள் ராஜமாதா.

தாபோல் மலையை நெருங்க நெருங்க மனித நடமாட்டமே இல்லாமல் இருப்பதைக் கவனிக்கிறான் கௌதமிபுத்ரன். சண்டிகாதேவி கோயில் குருக்களைச் சந்திக்கிறான். அவர் அவனை இரவில் கோயிலில் தங்க வேண்டாம் என்று எச்சரிக்கிறார். ஆனால் கௌதமிபுத்ரன் தன் விரதத்தைப் பூர்த்தி செய்யக் கோயிலில் இரவு தங்குகிறான்.

நள்ளிரவில் ஒரு விநோதமான மயக்கும் இசை கேட்கிறது. உற்று நோக்கினால் தூரத்துப் பாறையில் அழகிய பெண் உருவம் புலப்படுகிறது. கால்கள் இல்லாதது போல் இருப்பனவே தோன்றுகிறது. கௌதமிபுத்ரன் அந்த உருவத்தை நோக்கி ஓடுகிறான். ஆனால் அது மாயமாய் மறைந்து விடுகிறது. மறுநாள் நண்பகல் கோயில் பூஜாரி அவனுக்கு சமக் கடன்கள் செய்யத் தேவையான பொருட்களுடன் வருகிறார். அவன் உயிருடன் இருப்பதைப் பார்த்து ஆச்சரியப்படுகிறார்.

மறுநாளும் அங்கேயே படுத்து உறங்குகிறான் கௌதமிபுத்ரன். ஓர் உருவம் அவனை நெருங்கிக் குரல்வளையைப் பிடிக்கிறது. மென்மையான ஸ்பரிசத்திலிருந்து அது ஒரு பெண்ணின் கை என்று தெரிகிறது. அவனைக் கொல்லும் உத்தேசமில்லாமல் அவனைப் பயமுறுத்தும் நோக்கத்துடன் அந்தப் பெண் செயல்படுவது புரிகிறது. செத்துப் போனது போல் பாசாங்கு செய்கிறான் அவன். சற்றைக்கெல்லாம் அந்தப் பெண் அகன்று விடுகிறாள்.

மயக்கும் இசை மீண்டும் கேட்கவே எழுந்து அந்தப் பெண் உருவத்தைப் பின் தொடர்கிறான் கௌதமிபுத்ரன். உருவம் பாறைகளுக்கிடையே மாயமாக மறைந்து விடுகிறது. கடற்கரையை நோக்கி அவன் போகையில் இரண்டு வீரர்கள் அவனைக் கத்தி முனையில் மிரட்டுகிறார்கள். அவர்களை தன் வீர தீர சாகசத்தால் வீழ்த்திவிட்டுக் கடற்கரையை அடைகிறான். அங்கு வாசிஷ்டி நதி கடலில் சங்கமிக்கும் இடத்தில் படகு ஒன்று வருகிறது. படகில் வந்தவன் மோகினியைத் தான் சந்திக்க வந்துள்ளான் என்று அனுமானிக்கிறான். தொடர்ந்து நடந்த நிகழ்ச்சி கௌதமிபுத்ரனை அதிரச் செய்கிறது.

## 5. மகரந்தச் செய்தி

**வா**னில் மேகங்கள் விலகி மூன்றாவது ஜாமமும் கடந்து விடவே, ஐந்தாம் பிறைச் சந்திரன் தனது லேசான ஒளியை எங்கும் பரப்பித் தாபோல் துறைமுகத்தில் சித்தத்தை மயக்கும் மங்கிய நிலவைப் பரப்பிவிட்டதால், கடற்கரையில் நடப்பதைத் தனது மறைவிடத்திலிருந்து நன்றாகப் பார்க்க முடிந்தது கௌதமிபுத்ரனுக்கு. வாசிஷ்டி நதியில் படகில் வந்து அதன் முகத்துவாரத்தில் தாபோல் துறைமுகத்தில் இறங்கிய மனிதன் சற்றுக் குழப்பத்தை முகத்தில் காட்டியதையும் பிறகு



குழலே எடுத்து ஊதியதையும் கண்ட சாத வாகன வாலிபன், வந்த மனிதன் எதிர் பார்த்தபடி காரியங்கள் நடக்கவில்லையென் பதைப் புரிந்து கொண்டதன்றி, அப்படி அவன் எதிர்பார்ப்பை உடைத்ததற்குத் தானே காரணமென்பதையும் ஊகித்துக் கொண்டதால் சிறிது புன்முறுவல் கொண்டு வந்தவனே உச்சி முதல் உள்ளங்கால் வரை யில் அலசிப் பார்க்க முற்பட்டான்.

வந்தவன் நிடகாத்திரமாக ஆறடி உயரத் துக்குக் குறையாமலும் கெட்டியான சதைப் பிடிப்பு உள்ளவனுகவும் காணப்பட்டதா லும், அவன் மார்பில் தரித்திருந்த உலோக கவசமும் நல்ல எஃகால் செய்யப்பட்டதாகப் புலப்பட்டதாலும், அவன் இடையில் தரித் திருந்த பெரிய அகன்ற வாளும் நல்ல கன மாக இருப்பதாகத் தெரிந்திருந்ததாலும், அவன் சாக வம்சத்தவனுகவோ க்ஷத்ரப னுகவோ இருக்க வேண்டுமென்று ஊகித் தான் கௌதமிபுத்ரன். அந்த மனிதனின் அகன்ற மார்புக் கவசத்தில் பெரிதாகக் காணப்பட்ட* சக்ரம், வில், அம்பு, இலச்சினே

* Their (Kshatrapas or Kshaharatas) insignia arrow, Discus and Thunderbolt may be compared with certain pieces having 'Discus, Bow & Arrow' issued by AZES (Saka) "-History of Ancient India – By R. S. Tripathi Page 215 – 216.

# சாண்டில்யன்



சாகர்களையும், க்ஷத்ரப இனத்தையும் குறிக்குமாகையால் அவன் க்ஷத்ரபனாகவோ சாகனாகவோ இருக்கலாமென்று திட்டமான முடிவுக்கும் வந்தான் அந்த வாலிபன். அவனுடைய கண்கள் அந்த மங்கிய நிலவிலும் பெரிதாகவும் பளிச்சென்றும் ராட்சதக் கண்களாகத் தெரிந்ததைக் கவனித்த சாதவாகனன் அந்த மனிதன் எந்த ஆபத்தையும் அலட்சியமாக எதிர்நோக்க வல்லவனென்பதையும், சற்றுக் குரூரமானவனாகக் கூட இருக்கக் கூடியவனென்பதையும் உணர்ந்து கொண்டான். கடற்கரையில் உறுதியுடன் உலக்கைகள் போல் நின்ற கால்கள் அந்த மனிதனின் உரமான மனத்திற்குச் சான்றுகளாயிருந்தன.

படகிலிருந்து இறங்கியதும் அவன் சற்றுக் குழம்பி இருபுறமும் நோக்கிவிட்டுக் குழல் எடுத்து ஊதிய போது சற்றே கால்களை அசைத்ததைக் கவனித்த கௌதமிபுத்ரன் அவன் குழப்பத்தில் சிறிது கோபமும் கலந்திருப்பதைப் புரிந்து கொண்டான்.

இத்தகைய எண்ணங்களில் கௌதமிபுத்ரன் திளைத்திருந்த சமயத்தில் வாசிஷ்டி முகத்துவாரத்தின் நேர் எதிர்த்திசையிலிருந்து அந்த வெள்ளை மோகினி அலைகளில் தோன்றினாள். மலைக்காட்டிலிருந்து தான் இருந்த சற்றுத் தூரத்தில் அவள் பாறைகளில் இறங்கிக் கடற்கரையை அடைந்திருக்க வேண்டுமென்று ஊகித்தான். அப்படிப் பாறைகளில் தாவி இறங்கி வந்து கடற்கரை அலைகளை அடைந்ததும் அலை ஓரமே நடந்து வந்ததையும் அந்தச் சமயத்தில் அவள் அழகு யார் சித்தத்தையும் கொள்ளை கொள்ளும் வகையில் அமைந்திருந்ததையும் கண்ட வாலிபன் பிரமையின் உச்சத்தை அடைந்தான். நிலவின் வெளிச்சத்தில் அப்பொழுது தான் அவளை நன்றாகப் பார்க்க முடிந்தது அவனால். அவள் நல்ல உயரத்துடன் கொடி போலிருந்தாலும், அவள் உடலில் காணப்பட்ட எழுச்சிகள் அது மலர்க்கொடி என்பதை வலியுறுத்தின. கடலின் வேகமான காற்றில் அவள் வெண்ணிற ஆடை உடலில் நன்றாக ஒட்டிவிட்டதாலும், காலை அலம்பிய அலை சற்று அதிகமாகக் காலின் மேற்பகுதிகளை நனைத்துவிட்டதாலும், சற்று விளக்கமாகவே தெரிந்த அவள் பருவ உடலின் அழகுகள் கௌதமிபுத்ரன் சித்தத்தை ஈர்க்கவே செய்தன. கடற்காற்றில் நன்றாகவே பின்னால் பறந்த அவள் குழல்கள் அந்தச் சந்திர வெளிச்சத்திலும் அதிக கருமையைக் காட்டின. கன்னங்களில் புஷ்டியை மதியின் கிரணங்கள் அழகுபடுத்தின, வசீகர நீட்சண்யமான கண்களைத் தாக்கி எதிரொளி கிளப்பின. காற்றால் தேகத்தில் ஒட்டப்பட்ட ஆடையையும் திமிரிக் கொண்டு முறைத்த மார்பு முகடுகள் அவள் நடையின் வேகத்தில் கூட அசைய மறுத்தன. அவள் பருவத் தொடைகளைப் புலப்படுத்தவும் மறைக்கவும் உட்புகுந்த ஆடையைப் பார்க்க இஷ்டப்படாமல் கண்களை ஒரு விநாடி மூடிக்கொண்டான் கௌதமிபுத்ரன்.

அவன் கண்களைத் திறந்த போது அந்தச் சித்தினி படகில் வந்தவனை நெருங்கிக் கொண்டிருந்தாள். கால்களில் அலைகள் தாக்கியும் அலட்சியம் செய்து நடந்து வந்த அவளுடைய மலர்ப்பாதங்கள் ஏதோ அலை மீது ஊர்ந்து வருவது போன்ற பிரமையை அளித்தன. அந்த ஊர்ந்து வந்த முறையிலும் ஓர் அழகிருந்தது அவள் கால்களில். அப்பொழுது அவள் தலையில் சொருகியிருந்த ஒரு புஷ்பம் அத்தனை காற்றிலும் தலையிலிருந்து நகராமல் அவள் அழகிய வலது காதின் மேல் ஆபரணமெனக் காட்சியளித்தது. அப்படி பிரமிக்கும் அழகுடன் வேகமாக வாசிஷ்டி சங்கமத்துறையின் இடத்துக்கு வந்த அந்த மோகினியைத் தடுத்து விடுவதென்றும் அவசியமானால் வந்த க்ஷத்ரபனையும் மடக்குவதென்றும் நிர்மானித்த கௌதமிபுத்ரன் தனது புரவியைத் தட்டிவிட முற்பட்ட சமயத்தில் ஏற்பட்ட அந்த விபரீத நிகழ்ச்சி அவன் முயற்சிக்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்தது.

அந்தப் பெண் அவனை அணுகித் தனது இரு கைகளையும் நீட்டிக் கொண்டு சென்றாள். அந்தக் கைகளை அந்த க்ஷத்ரபன் தனது கையால் பலமாக அடித்தான். ''சித்தரஞ்சனி!'' என்று வெறிக்குரலில் அவளை அழைக்கவும் செய்தான். அந்தக் குரல் மலைப்பாறைகளில் தாக்கி ''சித்தரஞ்சனி! சித்தரஞ்சனி!'' என்று பலமுறை எதிரொலி செய்து மலையே அபயக்குரல் கொடுப்பது போன்ற விசித்திரத்தை சிருஷ்டித்தது.

அடுத்து அவள் நன்றாக இரைந்தே பேசியதால் அவள் சொற்கள் நன்றாக வாலிபன் காதுகளில் விழுந்தன. ''நான் குழலூதுமுன் ஏன் வரவில்லை நீ?'' என்று கேட்டான் அந்த மனிதன்.

---

மைசூர் ரசம், மைசூர் போண்டா முதலியன தெரியும். மற்றொரு கர்நாடகா ஸ்பெஷாலிடி அரிசி அல்வா. செய்து பாருங்களேன்!

## அரிசி அல்வா

அரிசி — கால் கிலோ,
தேங்காய் — ஒரு மூடி,
வெல்லம் — 200 கி.
ஏலக்காய் — கொஞ்சம்,
நெய் — 100 கி.

ஒரு மணி நேரம் ஊறிய அரிசியை நன்றாய் அரைத்து அதனுடன் வெல்லம், துருவின தேங்காய் இவற்றையும் சேர்த்து மறுபடி அரைக்கவும். வாணலியில் ஆறு கப் தண்ணீர் ஊற்றி, அரைத்ததைச் சேர்த்து நன்றாய்க் கிளறவும். நடுவிலே நெய்யையும் சேர்த்துக் கொள்ளவும். சரியான பதத்தில் இறக்கிவிட்டால் அரிசி அல்வா ரெடி!

— ஜூலி



திரு. M.A சுவாமிநாத ஐயர் (Retd. Chief Engineer, Gannon Dunkerley & Co.) அவர்களின் குமாரத்தி சௌ. சௌதாமினி B.Sc.க்கும், திருவண்ணாமலை M/S A. நடேச சாஸ்திரி அன் சன் உரிமையாளர் திரு. A.N. பாலசுப்ரமணியன் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி A.B. வெங்கடரமணன் B.E. (Hons.) (Neyveli Lignite Corporation Ltd, Neyveli)னுக்கும் சென்னை தி.நகர் பசும்பொன் தேவர் கல்யாண மண்டபத்தில் சமீபத்தில் விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது. திருமணத்தன்று நண்பர்களும், உறவினர்களும் வந்திருந்து மணமக்களை ஆசிர்வதித்தனர்.

# ஜென்மாஷ்டமி

அஷ்டமி திதி என்பது பிரதமையிலிருந்து எட்டாவது நாள். எல்லா அஷ்டமி திதியிலும் உயர்ந்தது ஜென்மாஷ்டமி. யாவரும் எந்தக் கடவுளையும் தியானம் செய்யப் புனிதமான நாள்.

ஜென்மாஷ்டமியைக் கொண்டாடத் தேவையான உப்புச்சீடை, வெல்லச்சீடை, கைமுறுக்கு எங்களிடம் கிடைக்கும்.

**திருமண வைபவங்களுக்கு:** பருப்புத் தேங்காய், சீர் முறுக்கு, அதிரசம், திரட்டிப்பால், ஆகியவை தயாரித்துக் கொடுக்கின்றோம்.

**பொடிகள்:** சாம்பார்ப்பொடி, ரசப்பொடி, தோசை மிளகாய்ப் பொடி, பருப்புப்பொடி, கருவேப்பிலைபொடி.

---

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின்ரோடு, காந்திநகர், அடையாறு,
சென்னை - 600 020 போன்: 412557

சித்தரஞ்சனி அவன் முன் அடிமைபோல் தலைகுனிந்து நின்றாள். பிறகு நிலத்தை நோக்கிய வண்ணம் ஏதோ மிக மெதுவாகச் சொன்னதால் கௌதமிபுத்ரன் காதில் ஏதும் விழவில்லை. ஆனால் அந்த மனிதன் மீண்டும் இரைந்தான், ''உன்னுடன் நான் அனுப்பியவர்கள் எங்கே?'' என்று.

இம்முறை அவள் பதிலேதும் சொல்லவில்லை. ஆனால் அவனுக்குப் பதில் கிடைக்கவே செய்தது. கௌதமிபுத்ரனிடமிருந்து தப்பி ஓடிவிட்ட வீரன் பாறைகளிலிருந்து எழுந்து க்ஷத்ரபனை நோக்கி ஓடி அவன் கால்களில் விழுந்து ஏதோ சொன்னான். அதைக் கேட்ட க்ஷத்ரபன் அந்த வீரனைக் காலால் உதைக்க வீரன் சற்று எட்டப் போய் விழுந்தான். இனி தான் வாளாவிருப்பதில் பயனில்லை என்று முடிவு செய்த கௌதமிபுத்ரன் தனது புரவியைக் காலால் உதைத்த விநாடியில் இன்னொரு விபரீதம் நேர்ந்தது கடற்கரையில். அந்த க்ஷத்ரபன் தனது வலது கையால் சித்தரஞ்சனியின் கன்னத்தில் ஓங்கி அறைந்தான். அந்த அறையால் துவண்டு விழப் போன அந்தக் கொடியை அந்தக் கொடியவன் கைகளால் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு தான் வந்த படகில் ஏற, படகோட்டி துரிதமாகப் படகைச் செலுத்தினான் வாசிஷ்டி நதியில்.

அதற்குமேல் தான் அந்த மனிதனைத் தொடருவதில் அர்த்தமில்லையென்பதை உணர்ந்து கொண்ட கௌதமிபுத்ரன், கரையில் நின்ற அந்த வீரனையாவது பிடிக்கலாமென்று எண்ணிய சமயத்தில் அந்த வீரனும் திமரென வாசிஷ்டி நதியில் குதித்து மறைந்துவிடவே கௌதமிபுத்ரன் தீர்க்க சிந்தனையுடன் புரவியைத் திருப்பிக் கொண்டு நடந்தான். ''எப்படியும் இந்த விடுகதைக்கு, ராட்சதத் தனத்துக்கு, பிசாசு நாடகத்துக்கு, நானே விடை கண்டுபிடிக்கிறேன்'' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டே புரவியைத் திருப்பிக் கொண்டு தாபிலேசுவரர் ஆலயத்துக்கு வந்து சேர்ந்தான். அப்பொழுது கிட்டத்தட்ட விடியும் சமயம் நெருங்கிக் கொண்டிருந்ததால் புரவியின் சேணத்தை நீக்கி அதை ஓட்டிவிட்டுத் தான் மட்டும் ஆலயத்திலிருந்து சிறிது தூரத்திலிருந்த அழகு பிசாசு நிற்கும் பாறையை நோக்கி நடந்தான். பாறைக்கு அருகில் வந்ததும் அதன்மீது குவியலாகக் கிடந்த புஷ்பங்களைக் கையால் தொட்டுப் பார்த்தான். அந்தக் காட்டு வாசமலர்களின் சுகந்தம் அவன் நாசியில் புகுந்து மயக்கவே, ''இது அவள் குவித்த மலர்க் கூட்டம். அது சித்தத்தைமயக்குவதில் என்ன ஆச்சரியம்?'' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான்

* கர்நாடகாவிலுள்ள மொகலஹள்ளி என்ற கிராமத்தில் ஒரு ஹரிஜன இளைஞருக்கு ஐந்நூறு ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டது. அவர் செய்த குற்றம்? ஒரு கோவிலுக்குள் நுழைந்தது!

— அனிதா ராமச்சந்திரன்.

அந்தப் பாறையில் அவள் கால்கள் பட்ட இடங்களைத் தொட்டுப் பார்க்க எண்ணி அந்தப் பாறையின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு அந்தப் புஷ்பக் குவியலை எடுத்து எடுத்து மலர்களை மடியில் போட்டுக் கொண்டான். புஷ்பங்கள் பூராவும் மடிக்கு வந்ததும் பாறையைக் கையொன்றால் தடவினான், சித்தரஞ்சனியின் கால்களையே தடவுவது போல். கைகளில் ஏதோ மழமழவென்று படவே கைகளைப் பார்த்தான். மடியின் மலர்கள் மீது விழுந்த நிலவு கைகளில் ஏதோ வழுவழுப்பான மஞ்சள் கறை பட்டிருப்பதைப் புலப்படுத்தவே உள்ளங்கைகளை முகர்ந்தான். வாசனை உணர்ச்சிகளை அள்ளவே சற்றுக் குனிந்து பாறையை உற்று நோக்கினான். பாறைமீது மகரந்தப்பொடியில் நன்றாக அழுத்தமாக இரண்டு சொற்கள் தெரிந்தன. அபாயம்! ஓடிவிடு!'' என்று பொருள் கொள்ளக் கூடிய சொற்கள் மகரந்தப் பொடி கொண்டு வடமொழியில் தீட்டப்பட்டிருந்தன.

தீட்டியது சித்தரஞ்சனிதான் என்பதைக் கௌதமிபுத்ரன் சந்தேகமற உணர்ந்து கொண்டான். தன் மீது அவளுக்கு ஏதோ அன்பிருப்பதாகவும் நினைத்தான். பிறகு சற்று இரைந்து நகைத்தான். ''இது புருஷனின் பலவீனம். எந்தப் பெண்ணும் தன் மீது காதல் கொள்வாள் என்ற பைத்தியம் ஆணுக்கு இருக்கிறது. இந்தச் செய்தியை அவள் ஏன் அனுதாபத்தால் எழுதியிருக்கக் கூடாது?'' என்றும் தன்னைக் கேட்டுக்கொண்டான். இருப்பினும் அவள் தன் மீது அன்பு கொண்டிருப்பதாகவே முடிவு செய்தான். அதற்கான காரணங்களையும் சிருஷ்டித்துக் கொள்ள முயன்றான். ''எனது கழுத்தைப் பிடித்த அவன் ஏன் என்னைக் கொல்லவில்லை? என் கால் தளைகளை ஏன் அவிழ்த்தான்? நான் இறப்பதை அவள் விரும்பவில்லை'' என்று கேள்வி கேட்டுப் பதிலும் சொல்லிக் கொண்டான். இந்தச் சிந்தனைகளுடன் அவன் மடியிலிருந்த மலர்களை அள்ளி மீண்டும் அந்தப் பாறை மீது குவித்தான். பிறகு எழுந்து தாபிலேசுவரர் ஆலயத்தை நோக்கி நடக்க முற்பட்டவன் சற்றுத் திரும்பிக் கடற்கரையை நோக்கி நடக்க முற்பட்டுத் தன்னைத் தாக்க முற்பட்ட வீரர்கள் இருந்த இடத்தை அடைந்தான். எந்த இடத்தில் தான் ஒருவனைக் கொன்று விட்டதாக நினைத்தானோ அந்த இடத்தில் ரத்தக்கறை தரையில் நன்றாகப் படிந்திருந்தது. தான் வீசிய கோடரியும் அருகே கிடந்தது. ஆனால் காயப்பட்ட மனிதனைக் காணவில்லை. அவனைத் தான் கொல்லவில்லை என்றும் அவன் பிழைத்து விட்டானென்றும் தீர்மானித்துக் கோடரியை எடுத்துக் கொண்டு கோயிலை எய்தினான். அப்பொழுதுபூர்ணமாகப்பொழுதுபுலர்ந்து விட்டதால் வாசிஷ்டி நதியில் நீராடச் சென்று உடைகளைக் களைந்து தரையில் வைத்துவிட்டு நீரில் இறங்கி நீந்த முற்பட்டான். கைகளை மாற்றிப் போட முயன்ற சமயத்தில் அவன் மார்பில் கட்டையொன்று தாக்கவே அதன் மீது நீந்திக் கரைக்கு வந்து கட்டையை இழுத்துத் தரையில் போட்டான். அவன் இழுத்துப் போட்டது கட்டையல்ல, மனித உடல்!

(தொடரும்)

உ

வாழ்வில் வகை சொல்லும்
வாடாக் கலை ஜோதிடத்தை கற்றிடுங்கள்.

# ஜோதிடப்பயிற்சி

தபால் வழி போதனை முறை

வாழ்வில் வளம் சேர்க்கும் காலம் வருமா? கலையுலக வாழ்வு கனிவு தருமா? பொங்கும் செல்வமும், புகழ் உயர்வும் கிட்டிடுமா? அகமகிழ வாழ்வாரா? அன்பொழுகும் இல்லறமும், அமைதி தரும் பிள்ளைகளும் அமையுமா? பனி போன்ற கனி வாழ்வும் — பண்பு மிக்க உறவினரும் ஒன்று சேர வாழ்வாரா? சொத்து சுகம் சூழ்ந்து வர, கொத்தான நலமெல்லாம் கூட வர குதூகல வாழ்வேற்று குழப்பமின்றி வாழ்வாரா? என்ற வகை வாழ்வுப் பாதை தன்னை — வறையறுத்துச் சொல்லுங்கலை ஜோதிடத்தை — இதுகாறும் எவரும் இது போன்ற எளிதான வழி தன்னில் இட்டெடுத்து வைத்ததில்லை. புரிந்துக் கொள்ளச் செய்ததில்லை. அனைவரும் அறிந்து கொள்ளும் விதமாக அள்ளியே படைக்கின்றோம். அமுது கொள்ள வந்திடுவீர். அறிந்து நலம் பெற்றிடுவீர்.



கற்று முடித்தார்க்கு சான்றிதழும், பட்டமும் சார்புடனே தருகின்றோம். இக் கலை தன்னை தொழிலாகக் கொள்வார்க்கு கை கொடுக்கும் இவை இரண்டும். பாடத்துடன் தருகின்ற பஞ்சாங்கமும், கட்டுரையும் பாடங்களை எளிதாக்கி கற்றிட துணை செய்யும். உங்கள் ஜாதக பலன், சந்தேக விளக்கம் பெற உற்ற வழிவகைகள் செய்யப்பட்டிருக்கின்றன. இப்போது மாணவர்கள், 'என்' பிரிவில் சேர்த்துக் கொள்ள படுகின்றனர். சேரும் முறையும், செலுத்தும் கட்டணமும் தெரிந்து கொள்ள — உங்கள் விலாசத்தைத் தெளிவாக எழுதி 30.9.85 தேதிக்குள் மனுச் செய்து கொள்ளுங்கள்.

பிரபலஜோதிடர் ஜோதிட ஆசிரியர்
ஸ்ரீமத் ஜெயவீரதேவா
யோகி, ராஜயோகபயிற்சியாளர் ☎
பிளாட் நெ.204, கதவு எண்-5. 26312
அண்ணாநகர், மதுரை-625 020.

"குனிஞ்சுக வாங்கோ. நிலைப்படில இடிச்சுக்கப் போறேள்!"

முற்றத்துச் சாய்வு நாற்காலியிலிருந்து கனமாய்க் குரல் வந்தது.

சுவாமிநாதன் பவ்யமாக தலையைச் சாய்த்துக் கொண்டு ரேழிக்குள் நுழைந்தார்.

உள்ளே நிலவிய தண்மை இதமாய் உடலைக் கவ்வியது. பளீரிடுகிற வெயிலில் நடந்து வந்திருந்தவருக்கு, அரையிருட்டுக்குக் கண்களை பழக்கப்படுத்தச் சிறிது நேரம் ஆயிற்று.

"வரணும்! யார் வேணும்?"

"இது சீதாராம வாத்தியார் வீடு தானே?"

"ஆமாம், நான்தான் அது." குரல் சாய்வு நாற்காலியிலிருந்து எழும்பிச் சுவாமிநாதன் கிட்டத்தில் வந்தது.

நெட்டையான உருவம். புருவங்கள் லேசாக நரைக்கத் தொடங்கியிருந்தன. நெற்றியில் சந்தனப் பொட்டு பாதி அழிந்து மூன்றும் பிறையிட்டிருந்தது. கண்ணாடி அமரும் இடத்தில் மூக்கில் சின்னதாய் ஒரு பள்ளம். எடுப்பான மூக்குக்கு அது அலங்காரமாகவே இருந்தது.

"ஒக்காருங்கோ, சுவாமி. ஒங்க பேரு என்ன?"

"அதேதான்!"

"என்ன அதேதான்!"

"சுவாமிநாதன். சுவாமின்னு கூப்பிடுவா!" ஹோவென்று அட்டகாசமாய்ச் சிரிக்கையில் புரை ஏறியது. சிரிப்பு நின்ற போது கண் ஓரங்களில் முத்து ஜொலித்தது. காமிரா உள்ளிருந்து ஒரு சிறுமி கொஞ்சம் பயத்துடன் எட்டிப் பார்த்தாள்.

"என்ன பாக்கறே பாவா? ஏதாவது வேணுமா?"

"இல்லப்பா" பார்வையோ சுவாமிநாதனை அளந்து கொண்டிருந்தது.

"மாமா என்னைப் பாக்க வந்திருக்கார். நீ போய்ப் படி. இந்த விளக்கைப் போட்டுட்டுப் போ."

மின்சாரம் வெளிச்சத்தை நிரப்பியதும், வீட்டின் இருளுக்குக் காரணம் புலப்பட்டது.

"ஏன் இருட்டா இருக்குன்னு பாக்கறேளா? வெயில் தாங்க முடியலே. உடம்பு வேர்த்து நசநசத்துப் போறது. மின்சாரம் இல்லாத அந்தக் காலமா? அதனால முத்தத்துக்கு மேலே முழுசா கூரை வேயச் சொன்னேன். விளக்கும் விசிறியும் போட்டுண்டேன்."

வெள்ளையாய்ச் சிரித்த பொழுது சுவாமிநாதனுக்கு சட்டென்று அவரிடம் ஒரு சகஜ பாவம் ஏற்பட்டது. அவருடைய அனுபவத்தில் சில பேருக்குத்தான் மற்றவர்களைக் கவரும் கலை பிறவியிலேயே படிந்திருப்பதை உணர்ந்திருக்கிறார்.

"கோயில் கும்பாபிஷேகத்தில் உங்க பொண்ணு சரசுவதியோட நாட்டியத்தை அரங்கேத்தணும்!" என்றார் சுவாமிநாதன்.

சீதாராமன் சரேலென எழுந்து கொண்டு சுவாமிநாதனின் கைகளைப் பற்றிக் கொண்டார்.



# என் குழந்தை எப்படி இருப்பா தெரியுமோ?

கண்களில் மின்னல் கீற்றுகள் அசுர வேகமாய்ப் பளிரிட்டன; கைகள் படபடத்தன.

''பேஷா, கோயிலுக்காக ஆட கொழந்தை கொடுத்து வச்சிருக்கணும்!''

அவருடைய பரவசத்தைக் கண்ட சுவாமிநாதன் உற்சாகமாய்த் தொடர்ந்தார்.

''நான் மெட்ராஸ்ல வேலை பாக்கறேன். சொந்த ஊருக்கு இங்கேயிருந்து ஆடுதுறை போய், ஒரு மைல் வடக்கே போகணும். சிவன் கோயில் ஒண்ணு இருக்கு அங்கே. அதற்கு நாங்க பிராகாரம் கட்டி, கும்பாபிஷேகம் பண்றோம்.''

''ரொம்ப சந்தோஷம்!''

"பனங்குடி அக்ரஹாரத்துலே சரசுவதின்னு ஒரு கொழந்தையிருக்கு. ரொம்ப நன்னு பரதம் தெரியும். கோயில்ல முதல்ல அரங்கேற்றம் பண்ணட்டும். எதிர்காலம் பிரகாசமாயிருக்குன்னு என்னை விட்டு கேட்கச் சொன்னு எங்க ஊர்லே.''

சீதாராமனின் உதடுகள் உணர்ச்சி மேலீட்டால் நடுங்கின. பேசிய பொழுது குரல் தழுதழுத்தது.

''இப்படிப்பட்ட நல்ல மனுஷா இருக்கறதாலதான் இன்னும் மழை பெய்யறது சுவாமி. இந்த ஏழையுடைய பெண்ணின் திறமையை உலகத்துக்குக் காட்ட ஆண்டவனே வழி பண்றப்போ, நான் சொல்ல என்னயிருக்கு?''

''உங்க பொண்ணு இருக்காளா இப்போ. கொஞ்சம் கூப்பிடுங்களேன்!''

''அவ, அம்மா கூட பாட்டியாத்துக்கு நன்னிலம் போயிருக்கா. நாளைக்குத்தான் வருவா.''

சரசுவதியைப் பற்றிப் பேசும்பொழுதெல்லாம் அவர் கண்களிலிருந்து சிதறிய ஒளி சுவாமிநாதனுக்கு புதிய அனுபவமாக இருந்தது. மகளிடம் பாசம் கொண்டிருக்கும் தகப்பனைத்தான் தெரியும். பக்தி கொண்டிருக்கும் தகப்பன்? அவளைப் பற்றித் தெரிந்து கொள்ளும் ஆர்வம் அவருள் கிளர்ந்தெழுந்தது.

''படிக்கிறாளா உங்க பொண்ணு?''

''என்ன அப்படிக் கேட்கிறேள்? இங்கே எட்டாவது படிக்கிறா. வாத்தியார் பையன் மக்குன்னு சொல்லுவா. இவ விதிவிலக்கு. ரெண்டு வயசிலேயே பள்ளிக்கூடம் போறேன்னு அடம் பிடிச்சா. மத்தியானம் சாதம் சாப்பிடாமே வாத்தியார் கூடவே



இருப்பா. புஸ்தகத்தைக் கண்லே ஒத்திக் இருப்பல வச்சுப்பா. அவ படிக்கிறதைப் பார்த்தா சரசுவதியே அவளண்டை பயபக்தியோட வாசம் பண்றுளோன்னு தோணும். புஸ்தகப் பையை சுவாமி அலமாரிலதான் வைப்பா. செருப்பைத் தொட்ட கையோட அதைத் தொட மாட்டா. எச்சில் பண்ண மாட்டா.''

''சின்னக் கொழந்தையா!''

''ஆமாம் சுவாமி. சொன்னு நீங்க நம்ப மாட்டீர். சமயத்திலே எங்களுக்கு பொறந்தவளான்னு சந்தேகம்வந்துதிகைச்சுப்போயிடுவோம். யாரும் எதுவும் அவளுக்குச் சொல்லிக் கொடுக்கலே. எல்லாம் ரத்தத்திலே ஊறினது மாதிரி இருக்கும். மடி, ஆசாரம் எல்லாம் தெரியும். அவ அம்மாளவையே கோவிச்சுப்பா. பாட்டி உயிரோட இருந்த வரைக்கும் ஆசாரமா இருந்தாப் போதுமா. இப்போ இருக்க வேணுமான்னு கேட்பா.'' அவருடைய குறும்புச் சிரிப்பு சுவாமிநாதனையும் தொற்றிக் கொண்டது.

''பரவாயில்லேயே, குழந்தை நியாயம்னு அம்மா அப்பான்னு கூடப் பாக்கம்மாட்டாப் போலிருக்கு. நாட்டியம் கத்துக் கொடுக்கறேளா?''

''முறையாக் கத்துக் கொடுக்க ஆரம்பிச்சு ஆறு மாசம்தான் ஆச்சு. அதுக்கு முன்னாடியே இவ தேர்ந்த நாட்டியக்காரி மாதிரி கண்ணாடி முன்னாடி அபிநயம் பிடிப்பா. தஞ்சாவூர்லே நாட்டியக் கச்சேரிக்கு அழைச்சுண்டு போவேன். கிரகிப்பு ஜாஸ்தி. ஒரு தரம் பார்த்தா 'கப்'னு பிடிச்சுண்டுடுவா. ஆத்துக்கு வந்து அதே மாதிரி ஆடிக் காட்டுவா.''

''அப்படியா?''

''சுவாமி, இவ வயசையொத்ததெல்லாம் அலங்காரத்தையே கவனிக்கும்பொழுது இவ மட்டும் நாட்டியத்தை கூர்மையா கவனிச்சுத் தானும் கத்துப்பா.''

''அடேயப்பா.'' சுவாமிநாதன் அதிசயத்துடன் இருக்கையைச் சற்றே முன்னுக்குத் தள்ளிக் கொண்டார். எல்லோருக்கும் இப்படி வாய்க்குமா? சிலதுகளை கட்டி மேய்ப்பதற்குள் போதும் போதுமென்று ஆகிவிடுகிறதே! இதற்கெல்லாம் புண்ணியம் செய்திருக்க வேண்டும்.

''பெருமூச்சு விடறேளா சுவாமி. நான் முழுக்கச் சொல்லி முடிக்கலே. தற்பெருமைல சொல்லிக்கறேன்னு நீங்க நினைக்கப் படாது. அந்தக் குழந்தையை நான் தள்ளி நின்னேதான் கவனிக்கறேன். கிட்டப்போக எனக்கு பயமாக இருக்கு. சில சமயம் எங்களோட வளர்ப்பு அவளுக்குப் போதுமான்னு சந்தேகம் வரும். இந்தப் பனங்குடி அக்ரஹாரம் அவளை முழுங்கிடுமோன்னு பீதி வரும்!''

''இப்ப என்ன ஆச்சுன்னு கலங்கறேள் மிஸ்டர் சீதாராமன்? அநாவசியமாய் எதற்கு பயப்படுகிறீர்கள்?''

''அவளுக்கு ஆர்வம் இல்லாத தொழில்னு இடையாது சுவாமி. தேனீ கூட சுறுசுறுப்பில தோத்துடும். அவகைவேலைய கூடம் முழுக்கப் பாருங்கோ. இரண்டாம் கட்டைத் தாண்டினால் அவ கையால வைச்ச மல்லி, சம்பங்கி, செம்பருத்தி எல்லாம் கோடிக் கணக்கில பூக்கறது. சமையலே மட்டும் விட்டு வைப்பாளா? பிரமாதமா நளபாக வேலையெல்லாம் பண்ணி அமிர்தமா சமைப்பா. அவ அம்மா சமையலை விட நன்னாருக்கும். பொண்ணுக்கும் அம்மாவுக்கும் பாதி சமயம் இதனால வாக்குவாதம்!''

''உங்க பொண்ணையும் நான் பாத்துட்டுப் போனா எல்லாருக்கும் திருப்தியா இருக்கும். கும்பாபிஷேகம் தேதி நிச்சயமானவுடனே தெரிவிக்கிறேன். நீங்க குடும்பத்தோட வரணும்.''

''கொஞ்சம் இருங்கோ சுவாமி. ஆடுதுறைலேருந்து வந்துட்டு ஒண்ணும் சாப்பிடாமே போனா எப்படி? சரசுவதி இருந்தா இதுக்குள்ளே உங்களுக்கு விருந்தே சமைச்சிருப்பா.

## நமது உலக சாம்பியன்



* உலக பில்லியர்ட்ஸ் சாம்பியன் வால்டர் வில்ட்ரன், 'பில்லியர்ட்ஸ் கற்றுக் கொள்ள இருபது வருஷங்களுக்கு மேலும் ஆகலாம் என்கிறார். கீத் சேத்தி பதினைந்து வயதில் 1976-ஆம் ஆண்டு ஜூனியர் நேஷனல் பில்லியர்ட்ஸ் பந்தயத்தில் நுழைந்தார்! ஒன்பதே வருஷங்களில் பில்லியர்ட்ஸில் பழுத்து முதிர்ந்த 75 வயது பாப்மார்ஷலை உலகப் போட்டியில் தோல்வியுற வைத்தது இமாலய சாதனை.
* கீத் சேத்திக்குச் சென்னைதான் 'ரொம்ப அதிர்ஷ்டம்' என்று பெருமைப்படுகிறார். சென்னையில் தான் கீத் சேத்தி ஜூனியர் பில்லியர்ட்ஸ், ஸ்னூக்கரில் வெற்றி பெற்றார். ஜாம்பவான் மைக்கேல் பெரைராவை வென்றதும் சென்னையில்தான்!
* பில்லியர்ட்ஸ் ஆட்டத்துக்காக அகமதாபாத்தில் குடியேறியுள்ள கீத் சேத்தி பிரம்மச்சாரி. எம்.பி.ஏ. பட்டதாரி. அகமதாபாத்திலுள்ள டாட்டா ஆயில் மில்லில் அதிகாரி. இவரது வெற்றிக்குக் குஜராத் அரசு ஒரு லட்சம் ரூபாய் பரிசளித்தது!

தகவல்: ஹிந்து விமர்சகர் மோகன்.

## KARNATAKA WHERE FORESIGHT RESULTED IN AN INDUSTRIAL REVOLUTION

Karnataka's industrial heritage dates back to its colourful history. Canals, built during the Vijayanagar Kingdom at Hampi, even today form part of the Tungabhadra Irrigation Project proving that feats of engineering skill are very much part of Karnataka's heritage.

Tippu Sultan later moulded Karnataka's growth with this innovative concept of State-supported industry. Sir. M. Visvesvaraya, the genius of Karnataka, turned Tippu Sultan's Hydro Electric Project into a reality — the first of its kind in Asia. This magnificent impetus saw the emergence of Karnataka as an industrial trend settor and a force to be reckoned with, Karnataka, blessed with rich natural resources, has many firsts to its credit, being forerunner in the manufacture of watches, scientific instruments, weapons, paper and glass. The dynamic ruler Tippu Sultan channelised the State's overseas trading enterprise and also laid the foundations of sericulture that has today brought Karnataka to the forefront in this agro-based industry. From as far back as 1780, these industries set up with state support have been part and parcel of Karnataka's everyday life.

In 1930, Sir M. Visvesvaraya set up the country's first Directorate of Industries and made a bold pioneering effort into steel that is today Visvesvaraya Iron and Steel Limited. This was possible because, the then Maharajas of Mysore shared his enthusiasm and patronised his efforts.

400 large and medium size industries and over 44,000 small scale units with a total investment of Rs. 11,220 crores and a disciplined labour force of over 800.000 comprise our state, throbbing with industry.

Karnataka is proud of what it is today. Thanks to great people, great minds and great visionaries whose foresight promised us a bright future.

Karnataka — continuing a tradition of industry.



KARNATAKA INFORMATION.

ಕರ್ನಾಟಕ ವಾರ್ತೆ

லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத்
தலைவர்களின் படைப்பு—

# விஐபி

# கன்கார்டு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டழகுள்ள புதிய விஐபி கன்கார்டு! நாகரீக நரம்போடிய அலாதி ஸ்டைலிங். கண்டறியாத வர்ண வகைகள்: பீச் க்ரீம் (செவ்விள மஞ்சள்), டெஸர்ட் பிரவுன் (மணற் கபில நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச் சாம்பல்), க்ரீம் சாக்கலேட், மேலும் பலப் பல. உட்புறமோ இடவசதி மிகுதி.

ஓடோடிப் பார்வையிடுவீர்: அருகிலுள்ள வியாபாரியிடம்... சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

## ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனை.




**தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,**
**வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.**

LINTAS VIP M 10 2013 TM

சின்னதுக்கு அவ்வளவு போறுது. ஒரு காப்பி போட்டுக் கொண்டு வரேன் இருங்கோ.''

ஒரு குடும்பத்தில் எல்லாரும் வரம் வாங்கிக் கொண்டு வந்திருப்பார்களா என்ன? சரசுவதி எப்படியிருப்பாள்? அப்பா மாதிரி உசரமா? சீதாராமனின் அம்சங்கள் பொருந்தியிருந்தால் லட்சணமான பெண் தான். இத்தனை திறமைகள் கூடிய பெண் அழகாகவும் இருக்க வேண்டுமே என்று கவலைப்பட்டார் சுவாமிநாதன்.

உள்ளே பாத்திரங்களின் ஓசையோடு பால் பொங்கும் வாசனையும் கூடம் வரை வந்து காற்றை நிரப்பியது.

''மாமா! மாமா! ஒரு நிமிஷம்...''

சுவாமிநாதன் சட்டென்று காமிரா அறையை நோக்கிப் பார்வையைத் திருப்பி னார்.

''இங்கவாங்கோ.'' அந்தச் சின்னப் பெண் ணின் கெஞ்சலில் ஒருவித பதட்டம் தெரிந்தது.

''என்னம்மா?''

''நா ஒண்ணு சொன்னா நம்புவேளா?''

''என்னம்மா?''

''எங்க அக்கா செத்துப் போயிட்டா மாமா.''

''என்னம்மா சொல்றே?''

''ஆமாம் மாமா. அக்கா ஒரு மாசத்துக்கு முன்னே விஷ ஜுரம் வந்து செத்துப் போயிட்டா!''

''அழாதேம்மா. அப்பா ஏன் எங்கிட்ட சொல்லலே?''

''அக்கா போனதிலிருந்து இப்படித்தான் மாமா. யாராவது அவ செத்துப் போனதைப் பத்தி பேசினா, கோவத்திலே கன்னாபின் னான்னு அடிச்சுடறா.''

''அடப்பாவமே!''

''அம்மாவுக்கு இப்படித்தான் ஆச்சு. அப்பா அப்பளக் கட்டையால தலையிலே மடேர்னு அடிச்சுட்டா. தஞ்சாவூர் ஆஸ்பத் திரில இருக்கா இப்போ.''

''அய்யய்யோ.''

''அப்பா வர்ற சத்தம் கேட்கிறது. நா சொன்னதா எதுவும் கேட்காதீங்கோ!'' மின்னல் வேகத்தில் உள்ளே மறைந்துவிட் டாள் அந்தச் சிறுமி.

''எனக்குத் தெரிஞ்ச காப்பி போட்டுக் கொடுத்திருக்கேன் சுவாமி, சாப்பி டுங்கோ.''

கால்கள் திடீரென்று வலுவிழந்து துவண்டு போன மாதிரி தோன்றியது சுவாமி நாதனுக்கு.

''அரங்கேற்றம் முடிஞ்சதும் உங்க வீட்டுல விருந்தே சாப்பிடறேன், கவலைப்படா தீங்கோ.''

அவருடைய கண்களை நேராக சந்திப் பதைத் தவிர்த்துத் தோள்களை ஆதரவாய்த் தட்டிக் கொடுத்து ரேழியை நோக்கி நடந் தார்.

நிலைப்படி 'டங்'கென்று இடித்தது. ஆனால் அதை உணர்த்தாத வண்ணம் இதயம் வலித் துக் கொண்டிருந்தது.




வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்

போட்டி: 18

அலுவலகத்திலோ பள்ளி கல்லூரியிலோ அல்லது அக்கம்பக்க வீட்டிலோ ஒரே பெயருடைய இருவர் இருந்து அதனால் ஏற்பட்ட குழப்பம், அதைத் தொடர்ந்த சுவையான சம்பவம் ஏதும் இருக்குமே? கீழே வெற்றிடத்தில் எழுதி அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. தவிர ஒருவருக்குக் குலுக்கல் முறையில் வி. ஐ. பி. ஸூட்கேஸ். உறையில் மேல் ''பெயர்க் குழப்பம்'' என்று குறிப்பிடவும். இந்த அரைப் பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்ப வேண்டும்.

முடிவு தேதி: 16.9.85

இன்னும் 35 விலையுயர்ந்த வி. ஐ. பி. ஸூட்கேஸ்களுள் ஒன்றை நாம்தான் பெறப் போகிறோம் என்ற நம்பிக்கையுடன் வாராவாரம் போட்டியில் பங்கு பெறுங்கள்!

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

நமக்குத் தேவையான சானிடரி பாதுகாப்பு கிடைக்குமா என்பதும் நிச்சயமில்லை. அது மட்டுமல்ல; எப்போது எந்த அசம்பாவிதம் நடந்து அவமானப்பட வேண்டி வருமோ என்று பயந்து நடுங்கிக் கொண்டே இருக்க வேண்டும்.

என்னைப் பொறுத்தவரையில் இதிலெல்லாம் ஓரளவு பழக்கப்பட்டுவிட்டேன் என்றே சொல்லலாம். தவிர, அந்தக் காலத்தில் சங்கடமான அந்த 5 நாட்களில் பெண்கள் வெளியே போவது என்கிற வழக்கமெல்லாம் அறவே கிடையாது.

**ஆனால் இப்போது காலம் மாறிவிட்டது... பெண்கள் மாதத்தின் அந்த 5 நாட்களில்கூட துடிப்பாக செயல்பட வேண்டியுள்ளது.**

ஆனால் இப்போது காலம் மாறிவிட்டது. இப்போது கேர்ஃப்ரீ போன்ற நவீன சானிடரி பாதுகாப்பு கிடைக்கும் இந்த நாளில், என் மகளும் நான் இளம் பெண்ணாக இருந்ததைப் போலவே ஏன் வீட்டிற்குள் அடைபட்டுக் கிடக்கவேண்டும். நான் வளர்ந்த காலம் வேறு. என் மகள் வளரும் சூழ்நிலை வேறு இன்றைய சிறுமிகள் மாதத்தின் அந்த 5 நாட்களில் கூட துடி துடிப்பாக செயல்பட வேண்டியுள்ளது.

என் மகளைப் பாருங்களேன். அவள், நான் இளம் பெண்ணாக இருந்த காலத்தில் செயல்பட்டதைவிட மிக...மிக சுறுசுறுப்புடன் செயல்பட வேண்டியிருக்கிறது...படிப்பு விஷயத்திலும் சரி. இதர வேலைகளிலும் சரி. நாங்கள் இருந்ததைப் போல என் மகளையும் வீட்டிற்குள் முடக்கிப்போட நான் விரும்பவில்லை.

அதனால்தான் நான் கேர்ஃப்ரீயைத் தேர்ந்தெடுத்தேன். என் மகளின் துடிப்புக்கும் துள்ளலுக்கும், ஆட்டத்துக்கும் ஓட்டத்துக்கும் ஈடு கொடுக்கும் இணைபிரியாத் தோழி கேர்ஃப்ரீ.

முக்கியமான அம்சம் என்னவென்றால் கேர்ஃப்ரீ ஒரு ரெடிமேட் நாப்கின். துணியையும் பஞ்சையும் வைத்து மடித்து, நேரத்தை வீணாக்கும் தொல்லை கிடையாது.

நான் அந்தக் காலத்தில் செய்தது போல என் மகள் துவைத்து, காயப் போட்டு, சங்கடப்பட வேண்டியதில்லை. தேவையான நேரத்திலே சட்டென்று புத்தம் புதுசாக, சுத்தமான ஒரு நாப்கினை எடுத்து அவள் உபயோகிக்கலாம்.

ஒரு விஷயத்தை நான் ஒப்புக்கொண்டாக வேண்டும். முதலில் எனக்கு இத்தகைய ரெடிமேட் நாப்கின்மீது கொஞ்சம் அவநம்பிக்கை இருக்கவே செய்தது. ஆனால், இப்போது என் மகள் மாசாமாசம் கேர்ஃப்ரீ பயன்படுத்தி மகிழ்ச்சியோடு இருப்பதைப் பார்த்ததும் எனக்குப் பூரண நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. தேவையான சானிடரி பாதுகாப்புக்கும், அசம்பாவிதம் எதுவும் நடக்காமல் தடுக்கவும் சானிடரி நாப்கின் பெரிதாக, கனமாக இருக்க வேண்டும் என்று நான் எண்ணி வந்தது தவறு என்பது இப்போது விளங்குகிறது.

கேர்ஃப்ரீ உபயோகிப்பதால் சுகமாகவும் பாதுகாப்பாகவும் உணர்வதாக என் மகளே சொல்கிறாள். பயமின்றி, கவலையின்றி வெளியே சுற்றவும் முடிகிறது என்றும் கூறுகிறாள். அப்பாடா! எனக்கு ஒரு கவலை விட்டது.

**கேர்ஃப்ரீ பயன்படுத்துவதில் சிரமமோ சிக்கலோ எதுவுமே கிடையாது. இதனாலேயே என் மகளுக்கு எந்த விதமான பிரச்னையும் இல்லை. அதைக் குறித்து நான் சந்தோஷப்படுகிறேன்.**

எனக்குக் கிடைக்காத ஒரு சுதந்திரமும் பாதுகாப்பும் கேர்ஃப்ரீ மூலம் என் மகளுக்குக் கிடைத்திருப்பதைப் பார்த்துப் பூரிப்படைகிறேன். ஒரு பெண்தான்—அதுவும் ஒரு அன்னைதான்—என்னுடைய மன உணர்வுகளைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியும்.

காலத்தோடு நாமும் மாறியாக வேண்டும். அதுவும் நமக்கு அதிக சுதந்திரமும் பாதுகாப்பும் தருகிற கேர்ஃப்ரீ வடிவிலே அந்த மாற்றம் இருக்குமானால், அதை நாம் வேண்டாம் என்று ஒதுக்குவானேன்?




கிடைக்கிறது. 10 உள்ள பேக் மற்றும் சிக்கனமிக்க 20 மற்றும் 30 உள்ள பேக்குகளிலும்

தவிரவும் கிடைக்கிறது. கேர்ஃப்ரீ

*கேர்ஃப்ரீ சானிடரி நாப்கின்கள்—பூரண சுகம், பரிபூரண பாதுகாப்பு—மாறுகின்ற காலத்துக்கேற்ற மகத்தான வசதி.*

Johnson & Johnson

OBM/5070/R2/T

## ஊதுவத்தி பெற்றுத் தரும் ஒன்பது கோடி!

கர்நாடக மாநிலத்தில் அகர்பத்தித்தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களின் எண்ணிக்கை ஒரு லட்சத்திற்குமேல் இருக்கும். இதில் 90 சதவீதம் பெண்கள். கர்நாடகாவிலிருந்து 85 சதவீதம் அகர்பத்தி வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது. 1982—83—ஆம் ஆண்டில் மட்டும் இந்த ஏற்றுமதி மூலம் ஒன்பது கோடி ரூபாய் நம்முடைய இந்திய அரசுக்கு அந்நியச் செலாவணி கிடைத்திருக்கிறது!

இந்திய அகர்பத்திகள் 35 நாடுகளுக்கு ஏற்றுமதியாகிறது. அமெரிக்காவில் அகர்பத்திகள் அறிமுகமாவதற்குக் காரணம் அரே கிருஷ்ண இயக்கம். இங்கிருந்து வாசனையற்ற அகர்பத்திகளை வரவழைத்து தேவைக்கேற்ற வாசனைகளில் தோய்த்துத் தங்களுடைய லேபிளில் விற்பனை செய்வதன் மூலம் ஓர் அமெரிக்க நிறுவனம் இரண்டு மில்லியன் டாலர் லாபம் சம்பாதித்திருப்பதாகக் கூறப்படுகிறது.

அகர்பத்தித்தொழில் குடிசைத்தொழில் போன்றது. அதனால்தான் பெரும்பாலும் இந்தத் தொழிலில் பெண்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். ஒவ்வொரு கம்பெனியும் தங்களுக்கென்று சில ஃபார்முலாக்களை வாசனை விஷயத்தில், தொழில் ரகசியமாகப் பாதுகாத்து வருகிறார்கள். தவிர ஒவ்வொரு கம்பெனியும் ஏறக்குறைய நூறு ரகங்களைத் தயாரிக்கிறது. ஒரு அகர்பத்தி எரியும் நேரம் அதனுடைய கனத்தையும் நீளத்தையும் பொறுத்ததல்ல. அதனுடைய கலவையையும் பொறுத்திருக்கிறது!

ஆயிரம் ஊதுவத்திகளை உருட்டித்தர கர்நாடக அரசு பரிந்துரையின்படி 1 60 பைசா கூலி நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. இருப்பினும் சில நிறுவனங்கள் இரண்டு ரூபாய் கூலி கொடுப்பதும் உண்டு.

புகைப்படம், கட்டுரை: — அ. குமார்.

* ஏற்றுமதியாகும் ஊதுவத்திகள்.



## கர்நாடகா சிப்ஸ்



## டர்பனின் சோகக் கதை!

மைசூர் என்றாலே தசரா தவிர, டர்பன் அணிந்த கம்பீரமான தோற்றமுடைய மகாராஜாவும் நினைவிற்கு வருவார். இக்காலம்

அணிந்து கல்லூரிக்கு வரும் பழக்கம் கர்நாடக இளைஞர்களிடையே இருந்தது. இன்று அநேகமாய் இல்லை.

டர்பன் தயாரிப்பு, விற்பனையில் பெங்களூரில் உள்ள பிரபாத் கலாவிதரு என்ற நிறுவனம் மிகவும் பிரபலமானது. ஒருவர் அணியும் டர்பனிலிருந்தே அவருடைய குலம், தொழில், சமுதாயத் தகுதி முதலியவற்றை அந்நாளில் கணித்து விடுவார்களாம்!

தார்வார் பக்கத்தில் ஒரே ஒரு காதை மட்டும் மூடிக் கொண்டு டர்பன் அணியும் வழக்கம் பார்ப்பதற்கு வேடிக்கையாக இருக்கும். குடகுப் பகுதியில் அணியும் டர்பனுக்கு 'மண்டைத் துணி' என்று பெயர்! தலைப்பாகையின் முதல் பகுதி மேற்புறம் கொண்டையாக நீண்டிருக்க, இறுதிப் பகுதி தோளின் மேல் தோகையாய்த் தொங்கிக் கொண்டிருக்கும்.

திருமணங்களில் மணமகனுக்கு டர்பன் அணிவிக்கும் பழக்கம் இன்னும் இருந்து வருகிறது. இதற்காக 'ரெடிமேட்' டர்பன்களைத் தயாரித்து அவரவர்கள் நிலைமைக்கேற்ப 5 ரூபாய் முதல் 50 ரூபாய் வரை வாடகைக்குத் தருகிறார்கள். சாதாரணமாக பட்டுத் துணியில் சரிகை வேலைப்பாட்டுடன் கூடிய ஒரு டர்பன் தயாரிக்க 500 ரூபாய் ஆகிறது.

மைசூர் மகாராஜா உடையார் வம்சத்திற்காக பெங்களூரில் உள்ள 'இம்பீரியல் ஹேட் ஒர்க்ஸ்' என்ற நிறுவனம்தான் பல ஆண்டுகளாக டர்பன்கள், தயாரித்துக் கொடுத்துக் கொண்டு வந்தார்கள். குறைந்த பட்சம் மாதத்திற்கு ஒரு புதிய டர்பன் அணியும் பழக்கம் கிருஷ்ண ராஜேந்திர உடையாருக்கு இருந்து வந்தது. தேவையான பொருட்களைக் கொடுத்து டர்பன் தயாரிக்க பதினைந்து ரூபாய் கூலி கொடுப்பாராம். நாளடைவில் ஒரு டர்பன் தயாரிக்கும் கூலி 85 ரூபாய்க்கு உயர்ந்து விட்டது!

இன்று யார் டர்பன் அணிகிறார்கள்? விதான் சௌதாவிலும், கர்நாடகா உயர்நீதி மன்றத்திலும் சில பியூன்கள் தொடர்ந்து அணிந்து வருகிறார்கள். இவர்களுக்கு டர்பனை அரசாங்கமே வழங்கி வந்தது. அதுவும் கடந்த ஆண்டு முதல் நிறுத்தப்பட்டுவிட்டது!

— அ. குமார்.

# சாதாரண மனிதனின் 'கருக்'கண்ணோட்டம்

"டெக்கான் ஹெரால்'டில் உதவி ஆசிரியராகப் பணியாற்றுகிறார் திரு. பி. வி. ராமமூர்த்தி. திரு. மூர்த்தியின் கார்ட்டூன்கள் கர்நாடகம் மட்டுமின்றி, நாடு முழுதும் பிரசித்தி பெற்றிருக்கின்றன.

1957—ல் மூர்த்தி பிரசித்தி பெற்ற 'குடிமகன்' (ஸிட்டிஸன்) கார்ட்டூன்களை வரைய ஆரம்பித்தார். அதற்கு ஒரு மாதம் கழித்துத்தான் ஆர். கே. லட்சுமணனின் 'ஸ்ரீமான் பொதுஜனம்' கார்ட்டூன்கள் வரத் தொடங்கியதாம். மூர்த்தியின் 'குடிமகன் ரொம்பவும் தமாஷான ஆள். அரசியல், பொருளாதாரம், சமூகம், கலை, இலக்கியம் பற்றிய சாதாரண மனிதனின் கண்ணோட்டத்தைச் சற்று 'கருக்' தன்மையுடன் உங்களுடன் பேசி, உங்கள் இதழ்க் கடையில் புன்னகையை வரவழைப்பார்.

இதுவரை மூர்த்தியின் கார்ட்டூன்கள் மூன்று புத்தகங்களாக வெளிவந்துள்ளன.

— விந்துஜா

"அமெரிக்காவில் நடக்கும் இந்திய விழாவில் என்னை ஆட அழைக்காதது பற்றி நான் கவலைப் படலே. இளைய தலைமுறையினருக்கு வாய்ப்புத் தரணும்னு சொல்றதுதான் பிடிக்கலே."



"வெறும் கையோடு திரும்பி வராதீங்க. ஒன்று மகனுக்கு மெடிகல் காலேஜ் ஸீட்டோடு வாங்க, இல்லே, புதுசா ஒரு மெடிகல் காலேஜ் ஆரம்பிக்க அனுமதியோடு வாங்க!"



"வாரத்திலே ரெண்டு நாள் உன்னைப் பார்க்க முடியாதேன்னு நினைச்சா ஐந்து நாள் வேலை கொண்டு வந்தவங்க மேலே கோபமா வருது!"



**வாஸந்தி** **21**



படிக்கட்டுகளைக் கடப்பதற்குள் மன்மோஹன் ஸிங் தொய்ந்து பாஸ்கரின் தோள் மேல் சரிந்து கொண்டிருந்தான். ஒரு வழியாகக் கடைசிப் படியைத் தொட்டதும் 142—இன் கதவைப் பாஸ்கர் படபடவென்று தட்டினான்.

''கௌன்?'' என்றபடி கதவைத் திறந்த அம்மாளின் பார்வையில் பீதி தெரிந்தது.

ரஞ்சனியின் அம்மாவாக இருக்கவேண்டும் என்கிற அனுமானத்துடன்,

''ரஞ்சனி இருக்காளா?'' என்று பாஸ்கர் தமிழில் கேட்டான்.

''இல்லே, வெளியிலே போயிருக்கா! இது யாரிது? மன்மோஹன் ஸிங்கா? ஐய்யோ இது என்ன இப்படிக் காயம்? உள்ளே அழைச்சிண்டு வா!''

மன்மோஹன் ஸிங், அரைகுறை மயக்கத்தில் கனமாகப் பாஸ்கரின் மேல் சாய்ந்து நடந்து ரஞ்சனியின் அம்மா காட்டிய இடத்தில் சாய்ந்து உட்கார்ந்தான். கண்களைத் திறக்க முடியாமல் ஒரு சோர்வு ஆட்கொண்டது. பரபரப்புடன் உள்ளேயிருந்து ரமேஷும் ரஞ்சனியின் அப்பாவும் வருவது தெரிந்தது. ரஞ்சனி எங்கே என்று பரிதவித்த கேள்வியைக் கேட்க முடியவில்லை. எங்கோ கடலுக்கடியில் மூழ்கும் உணர்வு ஏற்பட்டது. பாஸ்கர் அவர்களிடம் தமிழில் விவரங்கள் சொல்வதை இலேசாக உணர முடிந்தது. அவனுடைய மண்டைக் காயத்தை யாரோ துடைத்துக் கட்டுப் போட்டார்கள். தலையில் டர்பன் வழக்கம் போல் இருந்திருந்தால் தலை தப்பியிருக்கும்... மூளை இயங்க மறுத்தது. அந்த காரத்தை நோக்கிச் சரிந்து கொண்டிருந்தது...

''ட்ீ குடிக்கிறியா மன்மோஹன்?''

கண்ணைத் திறக்க முடியவில்லை. எங்கும் இருள். இப்பொழுது சோர்வே இல்லை. துக்கமில்லை. அவமானமில்லை. இங்க்மார் பார்க்மனின் ஸப்கான்ஷியஸ் ஷாட்டுகள் மாதிரி உடம்பு வெளியில் நின்று உள்நோக்கிப் பார்த்தது. நினைவேடுகளைப் பின்னால் தேடித் தேடி நின்று நிதானமாய்த் தன்னையே மீண்டும் பார்த்தது...

நான்கைந்து வயதுப் பையன் அவன். அம்ருத்ஸரின் தெருப் புழுதியெல்லாம் சிவந்த உடம்பில் பளிச்சென்று தெரிகிறது. தலைமுடி ஒரு சின்னக் கைக்குட்டைக்குள் உச்சந் தலையில் முடிந்து வைக்கப்பட்டிருக்கிறது. கூட விளையாடும் பையன்களின் முடி வெட்டப்பட்டிருக்கிறது. சிரிப்பும் சந்தோஷமும் எல்லோர் கன்னங்களிலும் ஜொலிக்கிறது.

'கோவிலுக்குக் கிளம்ப வேண்டும்' என்று அம்மா உள்ளேயிருந்து குரல் கொடுக்கிறாள். நண்பர்களும், உற்சாகமாகக் கிளம்புகிறார்கள். கிஷோர், நந்து, கோபால், ராமு... நீரோடையில் காலையும் கையையும் முகத்தையும் கழுவிக் கொள்கிறார்கள். பரிக்கிரமாவின் சலவைக் கல்லில் வேகமாக ஓடி அகால் தக்தின் எதிரில் இருக்கும் வில்வ மரத்தைத் தொட்டு ''நான்தான் பர்ஸ்ட், நான்தான் பர்ஸ்ட்!'' என்று குதிக்கிறார்கள்.

''சத்தம் போடக் கூடாது'' என்று அங்கிருந்த பெரியவர்களின் அதட்டலுக்குத் தங்களுக்குள் நமுட்டுச் சிரிப்புச் சிரிக்கிறார்கள். சாரி சாரியாக நடக்கும் ஜனங்களுடன் ஹரி மந்திர் ஸாஹிபுக்குள் நுழைகிறார்கள். தாடி இருப்பவர் இல்லாதவர் எல்லோரையும் தாண்டிப் படிக்கட்டுக்களில் ஏறி நடுக் கூடத்தைப் பார்த்தபடி இருக்கும் உப்பரிகைகளில் அமர்ந்து கொள்கிறார்கள். கீழே யிருந்து வரும் நாமாவளிப் பாட்டைத் தவிர வேறு ஓசையில்லை. சுவரில் படர்ந்திருந்த தங்கச் சித்திரங்களை வழக்கமான ஆர்வத்துடன் விரலால் தொட்டுப் பார்க்கிறார்கள். பாட்டின் இதமான ஒலி ஆடிக் களைத்த உடம்புக்குத் தாலாட்டைப் போல் இருக்கிறது. கீழே கண்ணை மூடிக் கொண்டு உட்கார்ந்திருக்கும் பெரியவர்கள் கூடத் தூங்குகிறார்கள் என்று தோன்றுகிறது.



நாமாவளி நின்றதும் அந்த நிசப்தமே ஆளை உலுக்குகிறது. எல்லோரும் எழுந்து நின்று கட்டளைகளைக் கேட்டு, சிவப்பு நிறப் பட்டுக் குடைக்கடியில் இருக்கும் அந்தப் பிரும்மாண்டப் புத்தகத்துக்கு முன் வணங்கி வெளியில் வருகிறார்கள். வெளியில் கால் வைத்ததும் அண்டாவில் இருந்து நெய் தள தளக்கும்ரவை அல்வாவைக் கரண்டி கரண்டியாகக் கொடுப்பதைச் சின்னக் கைகளில் ஏந்தி வாங்கி வாயில் திணித்துக் கைகழுவி நீர் குடித்து..... ஒவ்வொரு செயலுக்கும் எத்தனை சிரிப்பு வெடிக்கிறது!

கூட்டத்தில் முண்டி அடித்துக் கொண்டு முன்னேறுகையில் தலைமுடியின் முடிச்சு மாட்டிக் கொண்டு சுரீரென்று வலிக்கிறது. எதற்காக இதை அம்மா வெட்டாமல் வைத்திருக்கிறாள் என்று ஆத்திரம் பொடியனின் முகத்தில் தெரிகிறது.

"அம்மா, ராமு, நந்து மாதிரி நானும் முடி வெட்டிக்கிறேன்."

"கூடாது மகனே!" என்கிறாள் அம்மா அதிர்ந்து. "நீ சீக்கியன்!"

"எனக்கும்நந்து ராமுவுக்கும்என்ன வித்தியாசம்?"

"நீ சீக்கியன் என்கிற ஒரே வித்தியாசம் தான் கண்ணு!"

"நான் ஏன் சீக்கியனாயிருக்கணும்?"

அம்மா இப்பொழுது அதிகமாக அதிர்ந்து போகிறாள்.

"அது கடவுள் விருப்பம். கேள்வி கேட்கக் கூடாது!"

அம்மா அவனை அணைத்துக் கொள்கிறாள். "நான் உயிரோடு இருக்கும் வரை நீ முடியை வெட்டக்கூடாது!" இளசான முகத்தில் தெரியும் குழப்பம் பரிதாபமாக இருக்கிறது.

இது என்ன கட்டளையா, ஆக்ஞையா, விலங்கா?

சதா சர்வதா கேள்வி கோத்து நிற்கும் அந்தப் பொடியனின் கண்களை அவன் எட்ட நின்று ஆர்வத்துடன் பார்க்கிறான்.

அம்மா கண்களை மூடிக் கொண்டு தலையை முக்காடிட்டுப் பாடுகிறாள்.

"ஜிஸ்கி திஸ்கி கர்மாண்
ஆபண் வாஹெ குமாண்..."
(எல்லாம் அவனுடையது என்று நம்பு;

# அடுத்த இதழில்...




## முதல் மரியாதைக்குரிய பாரதிராஜா

## 'ஜி. ஹெச்'சில் தண்ணீர்ப் பஞ்சம்!

உன் அகங்காரத்தை ஒழி.)

அம்மாவின் மானஸீக சரணாகதி பிஞ்சு நெஞ்சைக் கூட உலுக்குகிறது.

இவளுடைய வேண்டுதலை எப்படி அலட்சியப்படுத்துவது?

முடி வளர்கிறது. 'பகடி பாந்த்'தும் சடங்குக்குப் பிறகு தலையில் டர்பன் ஏறுகிறது. மீசையும் தாடியும் கருமையிட ஆரம்பிக்கிறது.

பாலகன் குமர னாகி, குமரன் பெரியவனாகி, நேர் எதிரே கண்ணாடியின் பிரதிபலிப்பாய் நிற்கும் அந்த உருவத்தை அவன் பார்க்கிறான்.

தோற்றுப்போன அந்த உருவத்தை அவன் பச்சாதாபத்துடன் அணைத்துக் கொள்கிறான்.

'இது ஒரு கிரேக்க சோக நாடகம். இதன் முடிவு இப்படித்தான் இருக்கும். பஞ்சாபில் ஒரு வெறியர் கூட்டம் ஹிந்துக்களுக்குச் சாவு மணி அடித்த போது நீ மௌனமாகப் பார்த்துக் கொண்டு நின்றாய் — அந்த மணி உனக்கும் அடிக்கும் என்று நினைக்காமல் — புயலாய்த் தாக்கும் என்று உணராமல் —

அன்றைய உனது மௌனமே இன்றைய உனது சாவு மணி...

மன்மோஹன் தீவிரமாக மண்டையை அசைத்தான். சுரீரென்று வலித்தது.

"மன்மோஹன்! மன்மோஹன்!" பழக்கப்பட்ட குரல். பெண் குரல். அவனால் கண்ணைத் திறக்க முடியவில்லை.

நான் இறந்துவிட்டேன். என்னுடைய கனவுகள், ஆசைகள், மலர ஆரம்பித்த பிரேமை அல்லது பிரமை எல்லாம் மடிந்தாயிற்று.

"மன்மோஹன்! மன்மோஹன்!" பந்து எழும்புவது போல் புலன்கள் மேலே மெல்ல எழும்புகின்றன.

மன்மோஹன் கண்ணைத் திறந்து பார்த்தான். எதிரில் ரஞ்சனியின் முகம் தெரிந்தது. வழக்கமான உற்சாகமில்லாமல் கண்ணும் முகமும் மிக மிகச் சோர்வாகத் தெரிந்தது.

மயக்கம் முழுவதும் விடுபட்டு அவன் நிமிர்ந்தான். அவளைப் பார்த்து மெல்லச் சிரித்தான்.

"குட் 'யார்'! நான் செத்துப் போயிட்டேன்னு நினைச்சேன்!"

"நிஜம்மாவே இன்னிக்கு நீ மயிரிழையிலே தப்பிச்சிருக்கே!"

பேசும்போது ரஞ்சனியின் சிவந்த அதரங்கள் வழக்கமாகச் சிரித்துக் கொண்டிருக்கும். இன்றைக்கு, அதிர்ச்சியுடன் ஒரு துடிப்புத் தெரிந்தது சிரிக்க இயலாமல்.

"அது எங்களுடைய முட்டாள்தனத்தினாலே!" என்று அவன் பாஸ்கரைப் பார்த்துப் புன்னகை புரிந்தான்.

"அந்த ஆர்மி டிரக் மட்டும் சமயத்துக்கு வந்திருக்காவிட்டால் என்ன வேணும்னாலும் ஆகியிருக்கலாம் மன்மோஹன்! நான் ஒருத்தன் என்ன செய்திருக்க முடியும்?" என்றான் பாஸ்கர்.

ரஞ்சனியின் கண்களில் நீர் படருவதை மன்மோஹன் கவனித்தான். அடி மனம் நெகிழ்ந்து உடம்பு பூராவும் இதமான சூடு பரவிற்று.

"நீ ஒரு முட்டாள்!" என்றான் அவன் சுவாதீனமாக. "உன்னை யார் வெளியில் வரச் சொன்னது?"

மன்மோஹன் சமாதானமாகச் சிரித்தான்.

"முன் ஜாக்கிரதையாகத்தான் ஏற்பாட்டோடு கிளம்பினேன்!"

"நான் பேசக் கொடுத்தது என் முட்டாள்தனம்!" என்றான் பாஸ்கர்.

ரஞ்சனி மன்மோஹனைச் சில விநாடிகள் பார்த்து ஏதோ சொல்ல நினைப்பவள் போல் முயன்று சொல்லாமல் வாயை மூடிக் கொண்டாள்.

தன்னைப்பற்றி இவள் ரொம்பவும் கவலைப்பட்டிருக்கிறாள் என்கிற உணர்வு அவனுள் மறுபடி ஒரு நெகிழ்ச்சியை ஏற்படுத்திற்று. அவன் திடீரென்று நினைவு வந்தவனாய் கேட்டான்.

"நீ வெளியில் போயிருந்தியா என்ன? நான் இங்கே வரும்போது நீ இருந்தியா?"

"இல்லே! ருமா வீட்டுக்குப் போயிருந்தேன்" என்றாள் அவள் மெல்லிய குரலில். "பெரிய சோகம் அவர்கள் வீட்டிலே நடந்து போச்சு மன்மோஹன்....!"

அவன் சட்டென்று விழிகள் பிதுங்க, "யார்?" என்றான்.

"ருமா கல்யாணம் செய்துக்க இருந்த அர்ஜுன் ஸிங்!"

சரீரம் முழுவதும் விதிர்த்து நிமிர்ந்தது.

"என்னது?"

ரஞ்சனியின் கண்களில் மறுபடி நீர் திரையிட்டது.

"ருமாவைக் கட்டிப் பிடிக்க முடியல்லே மன்மோஹன்!"

மன்மோஹன் ஆயாசத்துடன் கண்களை மூடிக் கொண்டு தலையணையில் சாய்ந்து கொண்டான்.

"எவனோ செஞ்ச தப்புக்கு நான் ஏன் கஷ்டப்படணும்னு மூளை கலங்கினவளாட்டம் புலம்பறா! நான் என்ன சொல்லிச் சமாதானப்படுத்துவேன்? அவமானத்திலேயும் அதிர்ச்சியிலேயும் வாயடைச்சுப் போயிருக்கேன்! அவ என்னைப் பார்த்து என்ன சொன்னா தெரியுமா மன்மோஹன்? 'நீ வாயைத் திறக்கமாட்டே. ஹிந்துக்களை நீ விட்டுக் கொடுப்பியா!' என்கிறாள்!"

திடீரென்று ரஞ்சனி தன்னை அடக்கிக் கொள்ள முடியாதவள்போல் குலுங்கக் குலுங்க அழுவதை அவன் திடுக்கிட்டுப் பார்த்தான். கையால் அவளை அணைத்துச் சமாதானப்படுத்த வேண்டும் என்று எழுந்த வேகத்தை அடக்கிக் கொண்டு அவன் மிருதுவாகச் சொன்னான்.

"டேக் இட் ஈஸி ரஞ்சனி! அவளுடைய துக்கம் அவளுக்கு!"

ரஞ்சனி விருக்கென்று நிமிர்ந்தாள். "என்னுடைய துக்கம் உனக்குத் தெரியுமா? நான் என் சிநேகிதியை இழந்துட்டேன். அவ இனிமே என்னை நம்பமாட்டாள். ஐ ஹாவ் லாஸ்ட் எ ஃப்ரெண்ட்!"

"அது ஒரு இடைக்கால உணர்வு ரஞ்சனி!"

ரஞ்சனி தீவிரமாகத் தலையசைத்தாள்.

"இல்லை, வித்தியாசம் ஏற்பட்டுப் போச்சு. நான் அதுக்குப் பொறுப்பில்லாமையே!"

அவன் சரேலென்று யோசனையுடன் அவளைத் தீவிரமாகப் பார்த்தான்.

"மன்மோஹன்! உனக்கும் எனக்கும் இடையேயும் வித்தியாசம் ஏற்பட்டுப் போகுமா? என்னை வித்தியாசமாய் நினைக்க ஆரம்பிப்பாயா?"

தங்களைச் சுற்றி பாஸ்கரும் ரமேஷும், ரஞ்சனியின் அம்மா அப்பாவும் அமர்ந்திருப்பது இவளுக்கு மறந்துவிட்டதா என்கிற சங்கடத்துடன் அவன் எல்லாரையும் பார்த்தான். பிறகு தலையைக் குனிந்து கொண்டான்.

(தொடரும்)

# “சரி, சரி, ஆனால் என்னை தூரம் கொண்டு செ போகிறீர்கள் ?”





ா எவ்வளவு

ல்லப்




சிந்தித்துப் பாருங்கள் : டைம்ஸ் ஆஃப் இந்தியா, தனது பம்பாய், அகமதாபாத், டெல்லி மற்றும் லக்னோ பதிப்புகள் மூலம் மேற்குப் பகுதியிலும் வடக்குப் பகுதியிலும் உள்ள ஆங்கில வாசகர்களை சிறப்பாக நிறைவுபடுத்துகிறது. அசோஷியேட் ஒப்பந்தங்கள் மூலம் ஜெய்ப்பூர் மற்றும் பெங்களூரிலும் கூட.

இந்தியாவில் அதிகமாக விற்பனையாகும் பொருளாதார நாளேடான எக்கனமிக்ஸ் டைம்ஸ், பம்பாய் டெல்லி கல்கத்தாவில் வர்த்தகம் மற்றும் தொழில் விஷயங்கள் பற்றி உங்களுக்கு வழங்குகிறது. மகாராஷ்டிரா டைம்ஸ், மகாராஷ்டிரா மற்றும் கோவாவில் ஒரு பகுதிக்கும் அளிக்கிறது. நவபாரத் டைம்ஸ், டெல்லி மற்றும் டெல்லி சுற்றுப்புறத்திற்கு கணிசமாக பம்பாய் வாசகர் நலன்களுடன் அளிக்கிறது. அத்துடன் பெரும்பாலான ஆர்வமுள்ள குருப்புகளை திருப்திப்படுத்தக்கூடிய தேசீய சஞ்சிகைகள். இப்போது சிந்தித்துப் பாருங்கள் எவ்வளவு தூரம் நாங்கள் உங்களைக் கொண்டு செல்கிறோம்.

இந்த அளவு தொலைதூரம் அடைவதால், டைம்ஸ் ஆஃப் இந்தியா குருப், மக்கள் தொடர்பு சாதன திட்டத்தின் முதுகெலும்பாகும்.



நீங்கள் கொடுக்கும் பணத்திற்கு மிக மதிப்பு.

## டைம்ஸ் ஆஃப் இந்தியா குருப் வெளியீடுகள்

போட்டிக் கதை-1

# ரோபோ முத்தம்மா

**வி**ஸ்வநாதன் சந்தோஷத்தில் மிதந்து கொண்டிருந்தான். அதற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. முதல் காரணம் பக்கத்தில் அமர்ந்திருந்த புது மனைவி அம்புஜம். இரண்டாவது சமீபத்தில் அவனுடைய கம்பெனியின் மானேஜிங் டைரக்டராக அவன் அடைந்த பதவி உயர்வு. இந்தப் பதவி உயர்வில் அவனுக்குப் பிடித்த அம்சம், அவனுக்குக் கொடுக்கப்படும் அழகிய பங்களாவும், அதில் நிரம்பி வழியும் வசதிகளும்! குறிப்பாக அந்தப் பணிப் பெண் ரோபோ.

நீண்ட ஆலோசனைக்குப் பிறகு இப்போது தான் அரசாங்கம், ரோபோக்களை, தனி மனிதர்கள் வீடுகளிலும் வைத்துக் கொள்ள அனுமதியளித்துள்ளது. (வாங்குவதற்குத் தான் யாரும் தயாரில்லை — ஓரிரு பணக்காரர்களைத் தவிர). ஆனால் விஸ்வநாதனின் கம்பெனியில் அவன் பங்களாவிற்கு ஒரு ரோபோவை அளிப்பதாகச் சொன்னது அவனுடைய அதிர்ஷ்டம்தான். ரோபோ தயாராகிவிட்ட செய்தியைக் கம்பெனி மூலம் அறிந்து கொண்டதும், அதை ஷோ ரூமிலிருந்து அழைத்து வர அம்புஜத்துடன் புறப்பட்டான் விஸ்வநாதன்.

காரைப் 'பார்க்' செய்துவிட்டு அந்த ப்ரும்மாண்ட எலெக்ட்ரானிக் செண்டரினுள் நுழைந்தனர்.

வாசலில் புன்சிரிப்புடன் நின்றிருந்த அழகி, இவர்கள் சரியாக ஒரு மீட்டர் தூரத்தில் அவளை நெருங்கியதும், "குட் ஈவ்னிங்.. யு ஆர் வெல்கம்!" என்று கவர்ச்சியாக வரவேற்றாள்.

உள்ளே குறுக்கும் நெடுக்குமாக நிறையப் பேர் நடந்து கொண்டிருந்தனர்.

ஒரு பெண் மெதுவாக இவர்களருகில் வந்து, "உங்களுக்கு ஏதாவது உதவி தேவையா?" என்று கேட்டாள்.

"பணிப் பெண்கள் அறை எங்கே இருக்கிறது?" — விஸ்வநாதன்.

"என்னுடன் வாருங்கள்!" என்றபடி நடந்தாள் அவள்.

அஞ்ஞானி

"என்னன்னு இது! டைபாய்ட்ல விழுந்தவ மாதிரி அலுங்காம மெதுவா நடக்கறு. கொஞ்சம் சுறுசுறுப்பான ஆளா வைக்கக் கூடாது இவ்வளவு பெரிய எடத்துல?" அம்புஜம் கிசுகிசுத்தாள்.

"ஐயோ! இது ரோபோ. பேசாம வா. இது ஏதானும் ராஜீவ் காலத்துதா இருக்கும். அதான் இவ்வளவு மெதுவா இயங்கறது" என்றான் விஸ்வநாதன்.

"இதுதான் உள்ளே செல்லுங்கள்" என்று ஒரு அறைக் கதவைக் காட்டியது ரோபோ. இப்போது அம்புஜம் அதை உற்றுப் பார்த்தாள். அது விழி ஆடாமல் புன்சிரிப்புடன் நின்றது.

இருவரும் உள்ளே நுழைந்தனர். விஸ்வநாதன் அங்கிருந்த ஒருவரிடம் தான் வந்த விவரத்தைச் சொல்ல, அவர் தன் கையிலிருந்த சிறிய கருவியில் எவரிடமோ பேசிவிட்டு அவனிடம், "உங்க ரோபோ ரெடி சார். வாங்க போய்ப் பார்க்கலாம்" என்று அவர்களை அழைத்துச் சென்றார்.

"இந்த ரோபோ பரவாயில்லேன்னு. ரொம்ப இல்லேன்னாலும் ஓரளவுக்கு மனுஷா மாதிரியே இருக்கு" என்று தன் எக்ஸ்பர்ட் கமெண்ட்டைச் சொன்னாள் அம்புஜம்.

"சத்தமாப் பேசாதே. இது மனுஷன் தான்" என்று அவளை ரகசியமாகக் கிள்ளினான் விஸ்வநாதன். அம்புஜம் கொஞ்ச நேரத்திற்குக் கப்சிப் ஆனாள்.

அந்த மனிதர் இருவரையும் ஓர் அறைக்குள் அழைத்துச் சென்றார். அங்கே தனியாக ஒரு ரோபோ உட்கார்ந்திருந்தது.

"இதுதான் சார் உங்க ரோபோ. நீங்க பேசிட்டு இருங்க. நான் பேப்பர்ஸ் எல்லாம் ரெடி பண்ணிட்டு வரேன். நீங்க இதுகூட வீட்ல பேசற மாதிரியே பேசலாம்!" என்று சொல்லிவிட்டு ரோபோவைப் பார்த்து, "மிஸ் SXI இவர்கள் உன்னிடம் பேசணுமாம்!" என்றார்.

SXI மெல்ல எழுந்து கையை நீட்டியது. உதடுகள் விரிந்து சுருங்கின. விஸ்வநாதன் கை குலுக்கி, ''என் பேர் விஸ்வநாதன், இவ அம்புஜம்'' என்றான்.

''உட்காருங்க'' என்று சொல்லிவிட்டுத் தானும் உட்கார்ந்து கொண்டு பேச ஆரம் பித்தது SXI.

''நான் சமையலறை வேலைகள் முதல் வீட்டை அழகு படுத்தற வேலை வரை எல் லாம் செய்வேன். வீட்டு வேலைக்கான எல்லா மெஷின்களையும் கையாள எனக்குத் தெரி யும். புது வார்த்தைகள், வேலைகளைக் கற்றுக் கொள்ளவும் என் மெமரியில் இடமிருக்கு'' என்று கூறிவிட்டு அது நிறுத்தியதும், அம் புஜம், ''என்னன்னு இது தெலுங்கு டப்பிங் படம் மாதிரி ஏதோ பேசறது, என்னென் னவோ வாயசைக்கறது!'' என்று பலமாகக் கிசுகிசுத்தாள்.

வெளியே சென்றிருந்த மனிதர், விஸ்வ நாதனிடம் வந்து, ''சார், பேப்பர்ஸ் எல்லாம் ரெடி. வாங்க போகலாம். SXI நீயும் வா!'' என்றபடியே முன்னே நடந்தார்.

''கன்ட்ரோலர்'' என்று எழுதியிருந்த அறைக்குள் மூவரும் நுழைந்தனர். விஸ்வ நாதன் நிறைய பேப்பர்களில் கையெழுத் திட்டான். பின் SXI, அம்புஜம், விஸ்வநாதன் மூவரையும் கண்ட்ரோலருக்கு அறிமுகப் படுத்தி விட்டு வெளியேறினார் அந்த மனிதர்.

''இப்போது வெளியே சென்ற ரோபோ எத்தனை நேர்த்தியாக இருக்கிறது பார்த்தீர் களா! மனிதன் என்று ஏமாந்துதானே போனீர் கள்?'' என்று புன்னகையுடன் அவர்களைப் பார்த்தார் கண்ட்ரோலர். இருவர் கண் களும் வியப்பால் விரிந்தன. பின் அம்புஜம் கண்ட்ரோலரை சந்தேகத்துடன் பார்க்க அவர், ''நான் மனிதன்தான். நீங்கள் என்னை



நம்பலாம்!'' என்று சிரித்தார். தொடர்ந்து, ''நீங்கள் அதிர்ஷ்டசாலி. இந்த SXI கூட கவனமாகச் செய்யப்பட்டதுதான். இது CHM வரிசையைச் சேர்ந்தது. அதாவது Close to Human Model'' என்றார்.

விஸ்வநாதன், ''சார், எனக்கொரு சந்தேகம்.....'' என்று இழுத்தபடியே SXI ஐப் பார்த்தபோது அவர், ''உங்க சந்தேகம் எனக்குப் புரியறது. இது ஏதாவது காரணங்களினால் பழுதடைந்தால் நமக்கு ஆபத்து விளைவிக்குமோ என்ற பயம்தானே. இதுதான் பலர் ரோபோவைத் தனியாகத் தங்களிடம் வைத்துக் கொள்ளப் பயப்படுவதற்கு அடிப்படைக் காரணம். ஆனால் அந்த பயம் அர்த்தமற்றது. இதனுடைய நினைவுப் பாதைகள் மனிதனுக்கு எந்த வகையிலும் பாதிப்பு ஏற்படக்கூடாது என்ற அடிப்படை எண்ணத்திலிருந்துதான் கிளைகளாகப் பிரிகின்றன. எந்த சமயத்திலும் அந்த அடிப்படை மாற வாய்ப்பில்லை'' என்றவர் SXI ஐ அழைத்து ''இனி இவர்கள் இருவரும்தான் உன் எஜமானர்கள்'' என்று முறைப்படி அறிமுகப்படுத்தினார்.

''உங்களிடம் உண்மையுடன் பணி புரிவேன்'' என்றது SXI.

* * * * *

அம்புஜம் வீடியோ முன் உட்கார்ந்திருந்தாள். முப்பரிமாணத்தில் ஏதோ ஓடிக்கொண்டிருந்தது. அவள் மனம் அதில் பதியவில்லை. கூடத்தின் ஓரத்தில் ஏதோ அலங்கார மணியைச் சரி செய்து கொண்டிருந்த SXI ஐக் கவனித்துக் கொண்டிருந்தாள். இந்த இரண்டு மாதத்தில் வீடு ரொம்பவும் மாறியிருந்தது. SXI மாதத்திற்கு இருமுறை வீட்டை அழகாக மாற்றி அமைக்கிறது. அதே பொருட்கள்தான். ஒவ்வொரு முறையும் எத்தனை நேர்த்தியாக மாற்றம் செய்கிறது. அதன் விரல்களைப் பார்க்கிறாள். மணிகளை நிதானமாக ஆனால் லாவகமான ஒரு மனிதனின் சாதுர்யத்துடன் கோர்த்துக் கட்டுகிறது. அதனுடைய பார்வையும், விரல் அசைவுகளும் எப்படி இவ்வளவு விரைவாக ஒத்துழைக்கின்றன!

SXI மணியைத் தொங்கவிட்டுவிட்டு உள்ளே சென்றது. அதன் வேலையின் நேர்த்தியைப் பார்த்தபோது அம்புஜத்தின் மனத்தில் லேசான பொறாமை எழுந்தது. 'இது வெறும் மெஷின்தானே. அதன் பின்னணியில் இருப்பது மனித மூளைகள்தானே' என்று சமாதானமாக எண்ணிக்கொண்டாள். இருந்தாலும் SXIன் வரவு அம்புஜத்திற்குப் பிடிக்கவில்லை.

என்னதான் உடல் வளைவுகளுடன் பிரமிக்கும்படி அழகாய் இருக்கட்டும். கைகள் மெத்தென்று தொடும்போது 'பெண்' என்ற உணர்வை ஏற்படுத்தட்டும். சமையற்கலை நிபுணரையே மூளைக்குள் வைத்துக் கொண்டு விதவிதமாகச் செய்து கொடுக்கட்டும். அலுவலகம், வீடு என்று எது சம்பந்தப்பட்ட வேலையானாலும் சொன்னவுடன் பிடித்துக் கொண்டு நேரம் தவறாமல் செய்யட்டும். அதற்காக இப்படியா பேசுவது இந்த விஸ்வநாதன். அதுவும் அதன் எதிரிலேயே. மெஷின் தான் என்றாலும் அதற்குப் புரியாமலா இருக்கிறது.

''சும்மா உட்கார்ந்திருக்க போரடிக்கிறதேன்னு இன்னிக்கு நானே சமைச்சிருக்கேன்னு.''

''நீ சொல்லவே வேணாம். வாசனையே ஆளத் தொரத்தறது'' என்று அவன் கேலி செய்தபோது, SXIன் இதழ்கள் சுருங்கி விரிந்ததைப் போலத்தான் தோன்றியது அம்புஜத்திற்கு..

இதற்குப் போய் உணர்வுகள் இல்லை என்று அந்தக் கண்ட்ரோலர் சொன்னாரே!

அம்புஜமும், SXI வந்த புதிதில் மிகவும் குதூகலமாகத்தானிருந்தாள். தன் சோஷியாலஜி புத்தகங்களையெல்லாம் புரட்டிப் பார்த்துப் பழங்காலத்தில் பணிப் பெண்களுக்கு என்ன மாதிரிப் பெயர்கள் என்று கண்டறிந்து அதற்கு 'முத்தம்மா' என்ற புதுமைப் பெயரைக் கூட ஆசையாகத் தேர்ந்தெடுத்தாள். ஆனால் அதற்குள் ஆரம்பித்துவிட்ட சில்லறை மனஸ்தாபங்கள் அவளுடைய ஆர்வத்தை அழித்துவிட்டன.

விஸ்வநாதனையும், SXI நிறையவே பாதித்திருந்தது. அதன் அறிவு விலாசம் அவனைக் கவர்ந்தது. அதன் உடம்பின் வளைவு, நெளிவுகள் — தேர்ந்த சிற்பியின் கைத்திறன் அவனை அடிக்கடி உஷ்ணப்படுத்தியது.

அன்று மதியம் ஓய்வு எடுத்துக் கொள்ள வீட்டிற்கு வந்தபோது SXI கதவைத் திறந்தது. 'அம்புஜம் வெளியே போயிருக்காங்க' என்று சொல்லிவிட்டுத் தன் அறைக்குள் சென்றுவிட்டது.

அவன் உடை மாற்றிக் கொண்டு அதன் அறையினுள் பார்த்தபோது இதயம் ஒரு விநாடி நின்றுவிட்டு இயங்கியது. SXI பஞ்சை ஒரு திரவத்தில் நனைத்துத் தன் உடல் முழுவதும் பூசிக் கொண்டிருந்தது. பின் ஒரு செண்ட்டினை அடித்துக் கொண்டது. விஸ்வநாதன் அருகில் வந்து நிற்பதை அது கண்டு கொள்ளவே இல்லை.

''நீ எதுக்கு செண்ட் பூசிக்கற? ட்ரெஸ் ஸெல்லாம் மாத்தற?'' விஸ்வநாதன் அசடு வழிந்தான் கண்களை மேலும்கீழும் ஓடவிட்டு.

''என் உடம்புல அதிகம் அழுக்குப் படியாட்டாலும் அடுத்தவங்களைக் கவர்றதுக்காவது நான் இதெல்லாம் பண்ணிக்கணும் இல்லையா?'' என்று ரெடிமேட் பதிலைச் சொன்னது SXI.

அதன் ஸ்வாதீனத்தைக் கண்டு தைரியம் வந்தவனாக கிட்டத்தில் சென்றான். SXI வெறுமனே நின்றது. அதன் உடம்பின் இளம் சூடு அவனுள் தகிப்பை உண்டு பண்ணியது. தன் கைகளை அதைச் சுற்றி வளைத்தான்.

''வெக்கமாயில்ல உங்களுக்கு?''

விஸ்வநாதன் திடுக்கிட்டு SXI யிடமிருந்து விலகினான். அறை வாசலில் அம்புஜம் நின்று கொண்டிருந்தாள்.

''என்ன விட இதுதான் பெரிசாப் போச்சு



Smt. Rengamony

In fond and affectionate memory of

**Smt. RENGAMONY**

**Born: 25.3.1925**

**Died: 29.8.1972**

Beloved wife of
S. Padmanabhan.
Affectionate mother of
Jana and Kanna,
mother-in-law of
J. Gopalan & Malathy,
Grandmother of
Sandhya & Srinivas.

போல இருக்கு'' கண்களைக் கசக்கியபடியே தன் அறைக்குச் சென்றாள்.

''சரி, நீ எங்கே போனே சொல்லு?'' விஸ்வநாதன் பேச்சை மாற்றினான்.

''பேச்சை மாத்த வேண்டாம். கூப்பிடுங்க அத. நாக்கப் பிடுங்கிக்கற மாதிரி நாலு கேள்வி கேக்கறேன்.''

''அதுக்கு நாக்கே இல்ல பாவம். விட்டுடு அம்புஜம். இனிமே அந்த மாதிரி நடந்துக் காமப் பாத்துக்கறேன்'' என்றபடியே SXI னிடம் விட்ட இடத்திலிருந்து அம்புஜத்திடம் தொடர்ந்தான்.

அவள் அப்போதைக்கு மௌனமானாள்.

* * * * *

ஆனால் SXI என்னவோ அவனை ஈர்த்துக் கொண்டுதானிருந்தது. அம்புஜம் வெளியில் சென்று விடும் சமயங்களில் அடிக்கடி வரத் தொடங்கினான். SXI ற்கும் சில விஷயங்களைக் கற்றுத் தந்தான். அதன் நினைவு, செயல்களி லும் சில மாற்றங்கள் ஏற்பட்டன. ஒருநாள் அம்புஜம் ஷாப்பிங் சென்றதும் அதுவே வாசலை நோக்கியபடி விஸ்வநாதனை எதிர் நோக்கத் தொடங்கியது. அன்று அது நடந்து கொண்ட விதம் அவனை ஆச்சர்யத்திலும், மகிழ்ச்சியிலும் ஆழ்த்தியது.

ஷாப்பிங் சென்று திரும்பி வந்த அம்பு ஜம் ஏதோ தோன்றியவளாய் SXI ஐ வீடியோ ரூமிற்கு அழைத்துச் சென்றாள். அன்று மதியம் நடந்தவைகளை SXI ன் மெமரியிலிருந்து திரை யில் போட்டுக் காட்டும்படி கட்டளையிட் டாள்.

அது வீடியோவின் எதிரில் உட்கார்ந்து கொண்டது. அதன் இரு கண்களிலிருந்தும் திரையின் மீது ஒளி பாய SXI பார்த்தபடியே காட்சிகள் தெரிந்தன.

மூடியிருந்த வாசல் கதவு சிறிது நேரத்தில் திறக்கிறது. விஸ்வநாதன் வருகிறான். 'அம்பு ஜம் போயாச்சா?' என்றபடியே உள்ளே நுழைகிறான். பிறகு என்னென்னமோ பேசு கிறான். கொஞ்ச நேரத்திற்குப்பின் திரையில் அவன் முகம், தோள்கள், மூடிய கண்கள் என்று அவ்வப்போது க்ளோசப்பில் தெரி கின்றன. ''ஐ லவ் யூ SXI'' என்கிறான் மெலி தாக.

SXI அசையாமல் படம் காட்டிக் கொண் டிருக்கிறது. காட்சிகள் ஓடிக் கொண்டிருக் கும்போது ஏதோ அதனுள் நிகழ்கிறது.

'போறும், நிறுத்து' என்றபடியே அம்புஜம் இரு கைகளாலும் முகத்தை மூடிக் கொண்டு அழுகிறாள்.

அதையே பார்த்துக் கொண்டிருக்கிறது SXI. பிறகு மெதுவாக எழுந்து சென்று, வாசல் கதவைத் திறந்து கொண்டு சாலையில் இறங்கி நடக்கத் தொடங்குகிறது.

இரவு விஸ்வநாதன் வந்ததும் SXI வீட்டில் எங்கும் இல்லாதது தெரிய வருகிறது. இரு வரும் பரபரப்படைந்து கண்ட்ரோலருக்குப் போன் செய்தபோது அவர்,

''ரோபோக்கள் அப்படியெல்லாம் போகாது. அப்படிப் போயிருந்தால் அது அசாத்தியம்தான். பதட்டப்படாமல் இங்கே வாருங்கள். மற்றதைப் பேசிக் கொள்ள லாம்'' என்றார்.

அங்கு சென்றதும் இருவரிடமிருந்தும் எல்லா விவரங்களையும் கேட்டுக் கொண் டார்.

''நீங்கள் சொல்வதைக் கேட்கும்போது, நல்ல இதயமுள்ள ஒரு பெண் செய்யக் கூடி யதை SXI செய்திருப்பதாகத்தான் தோன்று கிறது. ஆனால் இது எப்படி நடந்தது என்று புரியவில்லை. நான் முன்பே சொன்னது போல ரோபோவிற்கு உணர்ச்சிகள் கிடை யாது. அது வெறும் மெஷின். ஆனால் சிந் திக்கத் தெரிந்த மெஷின். அங்குதான் ஏதோ பிசகு நடந்திருக்கிறது.

நீங்கள் இரண்டுபேருமே அதன் எஜமானர் கள். நீங்கள் அதை மெஷினாகக் கருதாமல் ஒரு பெண்ணைப் போல நடத்தியிருக்கிறீர் கள். ஒருவர் அன்பையும், மற்றவர் வெறுப் பையும் காட்டியிருக்கிறீர்கள். இவை நேரடி யாக SXI ஐ பாதிக்காவிட்டாலும் உங்கள் கட்டளைகள், உரையாடல்கள் யாவும் அதன் சிந்தனைப் பாதையில் ஏதோ ஒருவித ஏற்றத் தாழ்வினை ஏற்படுத்தியிருக்க வேண்டும்.

ஒரு மனிதன் எதிர்பார்ப்பது ஒன்றும், வெளியே நடப்பது ஒன்றுமாய் ஏமாற்றம் அடையும்போது, அவனுடைய உணர்ச்சிகள் ஒரு சமநிலையை இழந்து (Mental imbalance) மன நோயாளியாகித் தாறுமாறாக நடக்கிறான். ஆனால் SXI ற்கு அப்படி ஆக வாய்ப்பில்லை. அதன் சிந்தனைத் திறன் உட்பட எல்லா இயக் கங்களுக்கும் அடிப்படை கணிதம். கணிதம் உணர்ச்சியைத் தூண்டிவிடும் என்று நான் நம்பவில்லை. ஆனால் இவற்றை இயக்கும் லாஜிக்கில் ஏதாவது தவறு நடந்திருக்கலாம். அதாவது SXI னுள் ஏதோ லாஜிகல் இம் பாலன்ஸ் ஆகி இருக்க வேண்டும். அது உணர்ச்சியைப் போல ஏதோ ஒன்றை, அந்த நிலைக்கு இனிமேல்தான் பெயர் வைக்க வேண்டும்—தூண்டிவிட்டிருக்க வேண்டும்.

இவை ஏதுமில்லாமல் ஏதாவது ஒரு சிறு சர்க்யூட்டில் கூட SXI நடந்து கொள்வதின் ரகசியம் ஒளிந்திருக்கலாம். எப்படி இருந் தாலும் இது விஞ்ஞான முன்னேற்றத்திற்கு உதவக் கூடிய விஷயம்தான் என்று தோன்று கிறது. அதாவது மனிதனைப் போலவே உணர்வுகளை வெளிப்படுத்தக் கூடிய ரோபோக்களைத் தயாரிக்க SXI ஐ நன்கு ஆராய்ந்தால் வழி தோன்றும் என்று நினைக் கிறேன். அதற்கு நான் உங்கள் இருவருக்கும் நன்றி சொல்ல வேண்டும்'' என்று அவர் முடித்தவுடன்,

'சார்! அது வெளியில போய் ஏதான தாறுமாறு....' என்று விஸ்வநாதன் படபடத் தான்.

''அப்படி எல்லாம் செய்யாது. அது ஓரிடத் தில் சமத்தாக உட்கார்ந்து கொண்டிருக்கும். வாருங்கள் போய்ப் பார்க்கலாம்'' என்று எழுந்தார் கண்ட்ரோலர்.

## ர.சு.நல்லபெருமாள்

**முன் கதை**

சந்திரசூடன் ஒரு பிரபல வாரப் பத்திரிகையின் துணை ஆசிரியர். சிந்தனையைத் தூண்டும் சிறந்த எழுத்தாளர். அவர் குடியிருந்த வளவின் மற்றொரு பகுதியில் வசித்த ராதா என்ற பெண் தன் குடிகாரக் கணவனுடன் போராடுவதையும், அவரது அறைக்குக் கீழே வசித்த பார்வதி என்ற விதவை தன் குழந்தை சாரதாவுடன் ஒரு சோக கீதம் போல் வாழ்க்கை நடத்தி வருவதையும் குறித்துப் பலமுறை சிந்தித்து வந்தார். ராதாவின் வீட்டில் தங்கிப் படித்து வந்த பரணி என்ற இளைஞன் விவேகானந்தர் பக்தன். அவனுடைய ஸ்திரத்தையும் முனைப்பையும் அவ்வப்போது சோதித்து அவனையே சிந்திக்க வைத்தார் சந்திரசூடன்.

ஒரு நாள் பிரபல நடிகை இந்திராணி இறந்து விட்டதாகச் செய்தி கிடைக்கிறது. அவள் தற்கொலை செய்து கொண்டதற்கான தடையங்கள் கிடைக்கின்றன. சந்திரசூடன் இந்திராணியின் முடிவுக்குத் தானும் ஒரு காரணம் என்று நினைத்தார். அங்கீகரிக்கப்பட்ட கலை விமர்சகரான அவருடைய ஒரு சொல் அவள் பெறத் துடித்துக் கொண்டிருந்த ஊர்வசி விருதை அவளுக்கு அளித்திருக்கும். ஆனால் சந்திரசூடனோ அவளை 'நட்சத்திரம்' என்று அழைத்தாரே தவிர நடிகை என்று ஒப்புக் கொள்ளவேயில்லை. இறுதிச் சடங்குகளுக்குச் சென்று விட்டுத் திரும்பும்போது புகைப்பட நிபுணர் சம்பத், சந்திரசூடனிடம் இந்திராணியின் வாழ்க்கை வரலாறை எழுதுமாறு கூறுகிறார். மறுத்துவிடுகிறார் சந்திரசூடன்.

ஒரு நாள் காலை பரணி, சந்திரசூடனுக்குத் தேநீர் கொண்டு வருகிறான். குழந்தை சாரதா மேலே வந்து பரணி அங்கு மாட்டி வைத்திருக்கும் விவேகானந்தரின் படத்தைப்பார்க்கிறான். மொட்டைத் தலையுடன் கையில் கம்பு ஏந்தி நிற்கும் அந்தத் தோற்றம் அவளுக்கு விநோதமாகப் படுகிறது. குழந்தையை அழைத்துச் செல்ல வரும் பார்வதி சந்திரசூடனின் எழுத்தை நகல் எடுக்க வாங்கிச் செல்கிறான். இந்த உதவியை அவள் அடிக்கடி செய்வதுண்டு.

சைக்கிளில் அலுவலகத்துக்குப் போகையில் கன்னி அம்மன் கோவில் வாசலில் சக்தி சிவத்தைப் பார்க்கிறார் சந்திரசூடன். ஊரே அந்தச் சாமியாரைப் பைத்தியம் என்று நினைக்கையில் அவர் மட்டுமே சக்தி சிவம் ஒரு அம்மன் பைத்தியம் என்பதை உணர்கிறார்.

இனி மேலே தொடர்ந்து படியுங்கள்...

### 5. கலையும் உணர்வும்

பரதநாட்டிய அரங்கேற்றத்திற்குப் பரணியைஅழைத்துச்சென்றார்சந்திரசூடன். அரங்கேற்றம் நடைபெறவிருந்த சங்கீத சபா மண்டபத்தில் கூட்டம் நிறைந்திருந்தது. பெரிய அதிகாரியின் மகள் என்பதால் அதிகார வர்க்கம் முழுவதுமே அங்கு கூடியிருந்தது. முதன் மந்திரியின் தலைமையில் அரங்கேற்றம்.

சந்திரசூடனைக் கண்டதும் சபா செயலாளர் உற்சாகத்துடன் வரவேற்றார். சபாக்களில் சந்திரசூடனைக் கண்டுவிட்டால் போலிக் கலைஞர்களுக்குக் குலை நடுக்கந்தான். சந்திரசூடனின் விமர்சனத்தை நாடு முழுவதும் உன்னிப்பாகக் கவனித்தது.

பத்திரிகையாளருக்கு என்று பிரத்யேகமாக ஒதுக்கியிருந்த இடத்திற்கு சந்திரசூடனை அழைத்தார் செயலாளர். ''ரசிகர்களோடு சேர்ந்தே இருக்கிறேன்'' என்றவாறு, சந்திரசூடன்மூன்றாவதுவரிசையில்போய்அமர்ந்து கொண்டார். பக்கத்து நாற்காலியில் பரணியை அமர்த்திக் கொண்டார்.

பரணிக்கு அங்கு கூடியிருந்த கூட்டத்தின் படாடோபத்தைக் கண்டு பிரமிப்பாயிருந்தது — அடேயப்பா எத்தனை கார்கள். எத்தனை விதமான உடைகள். பெண்கள்தாம் எந்த மாதிரியெல்லாம் சிங்காரித்துக் கொண்டு வருகிறார்கள்! விதவிதமான வாசனைகள் குபீர் குபீரென்று வீசின — திறந்த வாய் மூடாமல் வேடிக்கை பார்த்தான்.

அவனுக்கு இடதுபுறத்தில் அமர்ந்திருந்த நபரைக் கவனித்தான். தன்னைப்போல் ஓர் இளைஞன் — வயது பதினாறு இருக்கும் — நாட்டியம் பார்க்க வந்திருக்கிறான் என்று நினைத்தான். ஊதா நிறத்தில் சாயம் போன கூடாரத்துணியில் முழுக்கால் சட்டை. அதில் முன்னாலும் பின்னாலும் பைகள். சாம்பல் நிறத்தில் கனத்த துணியில் அரைக்கைச் சட்டை. காலில் கான்வாஸ் ஷூ. மடியில் மட்டமான ஓர் ஆங்கில நாவல். அட்டையில் ஓர் அரை நிர்வாணப் பெண்ணை ஒருவன் அணைத்து முத்தமிட்டுக் கொண்டிருந்தான்.

பரணி அந்த நபரிடம், ''மிஸ்டர், மணி என்ன?'' என்று கேட்டான். அந்த நபர் திரும்பி, பரணியைப்பார்த்துக்கோபத்துடன் முறைத்துவிட்டுத் தலையைத் திருப்பியதைக் கண்டு பரணி திகைத்தான். பாவம், அவன் முகத்தில் அசடு வழிந்தது. ''அது மிஸ்டர் இல்லை, மிஸ்!'' என்றார் சந்திரசூடன் காதோடு.

# உணர்வுகள் உறங்குவதில்லை

திடீரென்று கூச்சம் தோன்றியது. பாவம், பரணி சங்கடப்பட்டுக் கொண்டிருந்தான். சற்று ஒதுங்கிச் சந்திரசூடனை நெருங்கிய படி இருந்தான். சந்திரசூடன், அவனுடைய சங்கடத்தை ரசித்துச் சிரித்தார். அவன் காத ருகே குனிந்து, ''சும்மா உட்கார்ந்திரு. ஒன்றும் ஆகிவிடாது. விவேகானந்தர் சொல்லியிருக் கிறார் என்பாயே, பெண்ணும் மரக்கட்டை யும் ஒன்று என்று'' என்றார்.

பரணி அசட்டுச் சிரிப்பை உதிர்த்தான். நெளிந்தான். சங்கடப்பட்டான்.

''சரி, சரி நீ இப்படி வா. சங்கடப்படாதே'' என்று அவனைத் தம் இடத்தில் இருத்திவிட்டு, அவனுடைய இடத்தில் சந்திரசூடன் அமர்ந்து கொண்டார்.

''விவேகானந்தர் நம்முடைய கலாச்சாரத் தையும், நாகரிகத்தையும் காப்பாற்ற அவ தரித்தார் என்பாயே'' என்றார்.

பரணி திரும்பி அந்தப் பெண்ணைப் பார்த் தான். அப்போது, பேன்டும், ஸ்லாக்கும் போட்டிருந்த ஒருவர் 'பைப்'பை வாயில் கவ்வியபடியே அங்கு வந்து அந்தப் பெண் ணிடம், 'ஹேய், ஹேமா, இடம் வசதியா யிருக்கா?' என்று ஆங்கிலத்தில் கேட்டார்.

''எஸ் டாடி, ஓ.கே.'' என்றாள் அந்தப் பெண். அவர் வேறு பக்கம் சென்றுவிட் டார்.

''ரொம்ப நாள் வெளி நாட்டிலேயே இருந் திருப்பார்களோ?'' என்று கேட்டான், பரணி.

''சேச்சே, இந்த ஊர்க்காரர்கள்தாம். தஞ் சாவூர்க்காரர். இது பிழைக்க வந்த இடம். டவுண் கம்பெனி ஒன்றில் மானேஜராயிருக் கிறார். பெண் படிக்கிறாள் போலிருக்கிறது'' என்றார், சந்திரசூடன்.

''ஆமாம், படிக்கிறாள். அவள் மடியில் கிடக்கும் புத்தகத்தைப் பாருங்கள்'' என்றான் பரணி.

சந்திரசூடன், அந்தப் பெண்ணின் மடி யில் கிடந்த ஆங்கில நாவலைப் பார்த்தார். அட்டைப் படத்தைப் பார்த்துச் சிரித்தார். ''பாரதியார் இருந்தால், நெஞ்சு பொறுக்கு தில்லையே என்று இன்னொரு முறை குமுறி யிருப்பார்'' என்றார்.

இரவு பத்து மணிக்கு நாட்டியம் முடிந்து இருவரும் வீடு திரும்பிக் கொண்டிருந்த



போது சந்திரசூடன் கேட்டார்: ''நாட்டியம் எப்படி இருந்தது? உன்னுடைய பிரும்மச்சரியம் கெட்டுவிடவில்லையே?''

பரணி சற்று நேரம் மௌனமாக நடந்து கொண்டிருந்தான். பிறகு சொன்னான்: ''பிரும்மச்சரியத்திற்கு இது ஒரு சோதனை தான்.''

சந்திரசூடன் அவனை வியப்புடன் பார்த்தார். ''எப்படிச் சோதனை?'' என்று கேட்டார்.

''ஒரு இளம் பெண், ரசனையோடு ஆடும் போது மனம் தடுமாறத்தானே செய்கிறது'' என்றான், சலிப்புடன்.

சந்திரசூடன் சிரித்தார். ''நாட்டியத்தைக் கலைக்கண்ணோடு காண வேண்டும்'' என்றார்.



''இறையுணர்வோடு ரசிக்க வேண்டும்'' என்று கூறி மீண்டும் சிரித்தார்.

''என்ன சார் சிரிக்கிறீர்கள்?''

''ஏதோ நினைப்பு வந்தது சிரித்தேன்.''

''எதைப் பற்றி?''

''இன்றைய உன்னுடைய அனுபவத்தைப் பற்றி. சபாவிற்குள் போனதுமே அந்த ஆண் வேஷம் போட்டிருந்த பெண் உன்னைச் சோதித்தாள். மேடையில், இன்னொரு பெண் சோதித்தாள். ரொம்பவும் சங்கடப்பட்டுப் போனாய்.''

''அப்படி ஒன்றும் இல்லை சார். மனம் என்னை மீறிப் போய் விடாது. மகாத்மாவின் போதனையில் ஊறியவன் சார், நான். அவ்வளவு சீக்கிரத்தில் மனசை அலைய விடமாட்டேன்.''

''நம்பிக்கை இருந்தால் சரி. வாழ்க உன் பிரும்மச்சரியம்.'' என்று கையை உயர்த்தி சந்திரசூடன் ஆசீர்வதித்தார்.

இருவரும் வீட்டு வாசலை நெருங்கிய போது வாசலில் பார்வதி, குழந்தை சாரதாவை இடுப்பில் வைத்தபடி நின்று கொண்டிருந்தாள். இவர்களைக் கண்டதும், ''ஓ! பரணியும் நாட்டியத்திற்கா வந்தான்?'' என்று வியப்புடன் கேட்டாள்.

''ஏன், நான் நாட்டியம் பார்க்கக் கூடாதா? கலை எல்லோருக்கும் பொது. பரத நாட்டியம் தெய்வீகக் கலை. பார்ப்பதில் என்ன தவறு?'' என்று படபடவென்று கேட்டவாறு அவளை முறைத்துப் பார்த்தான், பரணி.

சந்திரசூடனுக்குத் திகைப்பாயிருந்தது. பார்வதி சிரித்தபடியே, ''பார்க்கக் கூடாது என்று சொல்லவில்லையே. பெண்கள் ஆடுவதைப் பார்க்க மாட்டாயே என்றுதான்...''

''கலைக் கண்ணோடு நோக்கினால் எதையும் பார்க்கலாம்'' என்று கூறிவிட்டு, பரணி, வீட்டிற்குள் விரைந்து சென்று விட்டான்.

சந்திரசூடன் வியப்புடன் அவன் போவதைக் கவனித்தார். தான் ஏதோ தவறு செய்து விட்டதாக எண்ணிக் கொண்டு அவன் படும் பாட்டை நினைத்துச் சிரித்தார். அவர் மாடிக்குப் படியேறத் தொடங்கிய போது, பார்வதி, ''உங்களைத் தேடி உங்கள் நண்பர் சம்பத் வந்தார்'' என்றாள்..

''என்ன சொன்னான்?''

''நாளை வருவதாகச் சொன்னார்.''

''சாரதா அம்மையாருக்கு என்ன வேணுமாம்? ஏன் கண்ணீர்?'' என்றவாறு குழந்தையின் கன்னத்தைத் தட்டினார். குழந்தை கோபத்துடன் அவருடைய கையைத் தள்ளியது.

''அம்மையாருக்கு என்ன கோபம்?''

''சாக்லேட் வேணுமாம். பத்து மணிக்கு மேல் கடை ஏது?'' என்றாள் பார்வதி.

சந்திரசூடன் மாடிக்குச் சென்று விளக்கை ஏற்றினார். படுக்கையில் சம்மணம் போட்டு அமர்ந்தவாறு வெற்றிலை போடத் தொடங்கினார். மனம் சிந்தனையில் ஆழ்ந்தது. சற்று நேரம் கழித்து நோட்டுப் புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு நாட்டிய அரங்கேற்றத்தைப் பற்றி விமர்சனம் எழுதத் தொடங்கினார். எழுதி முடித்த போது கீழே ராதா வீட்டுக் கடிகாரம் பன்னிரண்டு முறை அபஸ்வரம் வாசித்தது. விளக்கை அணைத்துவிட்டு, மீண்டும் வெற்றிலை போடப் போனவரின் கவனம், சன்னல் வழியாகக் கீழ் வீட்டிற்குச் சென்றது.

ராதாவின் வீட்டுச் சன்னல் வழியாக விளக்கு வெளிச்சம் தெரிந்தது. பக்கத்து வீட்டுத் திண்ணையில் பரணி படுத்திருந்தான்.

இன்னும் தூங்காமல் ராதா என்ன செய்கிறாள்? கோபால் வரவில்லை. குடித்துவிட்டுக் கிளப்பில் சீட்டாடிக் கொண்டிருப்பார். இவள் விளக்கை ஏற்றி வைத்துக் கொண்டு ஜாமத்தில் என்ன செய்கிறாள்? இவளும் மகாத்மா காந்தியின் 'இல்லறமும் பிரும்மச்சரியமும்' புத்தகம் படிக்கிறாளா? இயல்பான உணர்வுகள் இரை தேடித் தவிக்கும்போது, காந்தியின் எழுத்தோ, விவேகானந்தரின் பேச்சோ என்ன செய்ய முடியும்? இவர்களால் உணர்வுகளை உறங்க வைக்க முடியுமா...?

'வாழ்க்கை என்பது ஒரு தேடல். இரவில் நிம்மதியான தூக்கத்தைத் தேடிப் பெறுவது தான் வாழ்க்கையின் குறிக்கோள்' என்றாளே, ராதா. இவளைப் பொறுத்தவரை வாழ்க்கையின் அடிப்படையே சீராக அமையவில்லையே. இவளுக்கு மட்டுமா? அடுத்த வீட்டுப் பார்வதி...? அவளுக்கும் தூக்கம் பிடிக்காமல்தானே பத்து மணிக்குமேல் குழந்தையைத் தூக்கிக் கொண்டு தெரு வாசலில் வந்து நின்று நிலவைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

சந்திரசூடனுக்கு ராதாவின் கணவர் கோபால் மீது கோபம் எழுந்தது — ஒரு பெண்ணின் உணர்வுகளைப் புரிந்து கொள்ளாத ஜடத்திற்கெல்லாம் திருமணம் எதற்கு? பெரிய பேராசிரியர். மாணவர்களுக்கு வழி காட்ட வேண்டியவர். தம்முடைய பாதையே தெரியாமல் திசைமாறித் திரிகிறார். எங்கோ படித்த நினைவு வருகிறது: 'மதுவை அணைப் பவனால் மாதை அணைக்க இயலாது.'

கீழே சன்னல் அருகில் அவளுடைய உருவம் தெரிந்தது. சன்னல் வழியாக வாசலைப் பார்த்தாள். பார்வை நிலைகுத்தி நின்றது. மெல்லப் பார்வை திரும்பியது. திண்ணையில் உறங்கிக் கொண்டிருந்த பரணியைப் பார்த்தாள். பிறகு சன்னல் வழியே வானத்தைப் பார்த்தாள். நிலவை வெறிக்க நோக்கினாள். பெருமூச்சு வெளிவந்தது. நெடிய பெருமூச்சு. மாடியிலிருந்த சந்திரசூடனுக்கே கேட்டது.

இப்படி ஒரு பெண் தனக்கு மனைவியாக வாய்த்தால் எப்படி இருக்கும் என்று கற்பனை செய்து பார்த்தார். அவளுடைய அழகும், அறிவுக் கூர்மையும், யாருக்கும் பயன்படாமல் வீணாகிக் கொண்டிருப்பதை நினைத்துப் பார்த்தார்.

சீச்சீ, இன்னொருவன் மனைவியைப் பற்றி இதென்ன கற்பனை? நான் திருமணம் என்னும் வேலிக்குள் அகப்படத் தயாரா...?

சந்திரசூடனுக்குத் தம்முடைய நினைப்பை எண்ணிச் சிரிப்பு வந்தது. சன்னல் வழியாகக் கீழே கவனித்தார். ராதா இன்னும் சன்னல் அருகில்தானிருந்தாள்.

அவளுடைய கவனம் வெளிவாசலை நோக்கித் திரும்பியது. வாசலில் ஆட்டோ ரிக்ஷாவின் இரைச்சல். ராதா கதவைத் திறந்து கொண்டு வெளிவாசலுக்கு விரைந்தாள். சப்தம் கேட்டுப் பரணியும் எழுந்து வாசலுக்குச் சென்றான். கோபால் தள்ளாடியபடியே வந்தார். ஒரு பக்கம் ராதாவும், இன்னொரு பக்கம் பரணியும் அவரைத் தாங்கியவாறு வீட்டுக்குள் அழைத்துச் சென்றனர். அடுத்த வீட்டுச் சன்னல் வழியாகப் பார்வதியும் கவனித்துக் கொண்டிருந்தாள்.

(தொடரும்)

''நீங்கள் கேட்டவை நிகழ்ச்சியில் அதிகமா 'செக்ஸி' பாட்டாவே ஒலி பரப்பறாங்களே! இந்தயெல்லாம் சிறு பிள்ளைங்க கேட்டா என்ன ஆகும்?''

''நிகழ்ச்சியின் பெயரை 'நீங்கள் கெட்டவை'ன்னு மாத்திட வேண்டியது தான்!''

—சம்பத்குமாரி.



## 5. சித்திரத்தில் ''ஸித்தி''த் திறம்

> குழந்தை விளையாட்டில் பராசக்திக்குள்ள தேர்ச்சியாலேயே ''பாலா'' எனப்படுகிறாள்.
>
> — த்ரிபுரா ஸித்தாந்தம்.

ஆஸ்திகத்துக்கு, ஆத்மிகத்துக்கு, அறத்துக்கு எல்லை நிலம் என்ன? அன்பு. அன்பே பெருநலமும். நல்லவர் யார்? அன்புள்ளவர் தாமே? ''நல்லவர்கள் எப்போதும் விளையாட்டுக் களிப்பிலிருப்பார்கள்'' என்பார் ஆன்மியக் கவி யேட்ஸ். ஏன்? இவரது களியாடல் பிறர்க்கும் களியூட்டுவதாலேயே! பிறர் இன்புறவே ஆனந்தக் கூத்தடிப்பார்கள். ஸ்வாமி நல்லதினும் நல்லவர்; அன்பினும் அன்பானவர். அதனால் அற்புதமோ, கிற்புதமோ ஒரு கலர்ப் பொடி போட்டு அன்பு மாவைப் பிசைந்து விளையாடல் நெய்யில் பொரித்து உலகுக்குத் தருகிறார்.

எத்தனை அழகாகச் சொன்னார்? ''நான் சித்து பண்ணுகிறேன் என்கிறார்களா? சொல்லிவிட்டுப் போகட்டும். 'சித்து கூட இல்லை — ஃப்ராட்' என்கிறார்களா? அப்படித்தான் இருக்கட்டுமே! எனக்கு என் குழந்தைகளை எப்படியாவது ஸந்தோஷப்படுத்த வேண்டும். அதற்காக எதுவோ பண்ணி விட்டுப் போகிறேன்.''

குற்றமற்ற விளையாட்டு. அன்புக் கடல் இறைக்கும் கிளிஞ்சலி லிருந்து முத்து வரையிலான விதவித அற்புதங்கள். வாழ்வின் நெரிசலில் இறுக்குண்ட மக்கள் பலர் இவற்றில் இளக்கம் கண்டு இன்புறுகிறார்கள். சீட்டால், ஸினிமாவால், ட்ராஷ் நாவலால், மதுவால் பெறும் இன்பமில்லை. குற்றமற்ற இன்பம். புலனின்பமில்லை. தூய இன்பம்.

ஆனால் இதுதான் ஆத்திகம், ஆன்மியம், அறம் என மயங்கிவிட மாட்டார்களா என்றால் — ஒரு நாளும் மாட்டார்கள். அற்புதம் காண வருவோருக்கு ஸ்வாமி திவ்ய ப்ரேமையையும், ஆத்ம ஞானத்தையும், நல்லறங்களையும், தாமும் அயராமல், அவர்களுக்கும் அயர்ச்சி தராமல், அறிவியல் விருந்தாக உபதேசித்தபடிதான் இருக்கிறார். அவரை விடச் சிறப்பாக ஆத்ம சாஸ்த்ரங்களையோ, ஆஸ்திக நூல்களையோ, ஸநாதன தர்மக் கோட்பாடுகளையோ பல்லாயிரவருக்குப் பரிமளிக்க உபதேசிப்பவர் — பொதுத் தொண்டிலே, இத்தனை லக்ஷம் ஜனங்களை உலக நாடுகளெங்கிலும் ஈடுபடுத்தியவர் — உண்டா என்பது ஐயமே.

வெறும் வாயுபதேசமா செய்கிறார்? ஜீவக் குருத்திலிருந்தே பொங்கு புனலாய்ப் பொழிகிறார். அதனாலேயே தம் உபதேசப்படி ஊரளவேனும் செல்லும் ஜீவித உதாரணங்களை இவ்வளவு பெருமளவில் ஸ்ருஷ்டித்திருக்கிறார். இந்த ''ஸ்ருஷ்டிப்பு''த்தான் அவரது தலையாய 'மெடீரியலைஸேஷன்.'

கேள்வி கேட்பவரைக் கேட்கிறோம்: ஜன்ம தின விழாவுக்கு நவ கண்டத்திலிருந்தும் லக்ஷம் மக்கள் கூடுகிறார்களே, சென்னை



போன்ற நகர்களில் அவர் முகாமிட்டால் ஒவ்வொரு வேளையும் பல்லாயிரவர் திரள்கிறார்களே — அவர்கள் அற்புதம் பார்க்கவா கூடுகிறார்கள்? அல்லது அவரேனும் செய்து காட்டுகிறாரா? காட்டவில்லையே என்று எவராவது ஏமாந்து திரும்புகிறார்களா?

அற்புதத்தோடேயே நின்றுவிடும் ஜனங்கள் எவரோ இருக்கிறார்களென்றால், அவர்கள் வேறெவ்விதத்திலும் எந்த மஹானுமே உயர் தத்துவத்துக்குத் திருப்ப முடியாதவர்களாகத்தான் இருப்பார்கள்.

வண்ண விசித்திரப் பூவைக் காட்டி வண்டை வசீகரித்து, தேனை ஊட்டிக் களிக்க வைத்து, முடிவாக ஒரு செடி தன் மகரந்தப் பரிவர்த்தனை பெற்று, ஸாமர்த்யமாக இனவ்ருத்தி கண்டு விடுகிறதென ஆரம்ப வகுப்பில் படித்தோமே! அப்படி அத்புத விசித்ரம் காட்டி ஆகர்ஷித்து, அன்புத் தேனூட்டி, தன் இனமேயான மக்கள் ஆன்ம அபிவ்ருத்தி காணவே ஸாயி "ஸாமர்த்யம்" செய்கிறார்!

'சித்தாகவே இருக்கட்டும், ஃப்ராடாகவே இருக்கட்டும்' என்று அவர் சொன்னால் அப்படி ஆகிவிடாது. அன்பெனும் ஸித்தி தவிரத் தமக்கு அத்புத சக்தி எதுவுமில்லை என்று அவர் பன்முறை ஸத்யம் செய்திருக்கிறார்.

முன்னொருகாலத்தில்ஸி.டி.ஆர்.இவரைச் செய்யாத கேலியில்லை. இவர் விஜயம் செய்யும் ஒரு வீட்டுக்கு அதே ஸமயம் அவரும் தமது ஜமாவுடன் 'விஜயம்' செய்வார். இவர் இருக்கும் அறைப் புறமே வராமல், அவ்வீட்டின் இன்னொரு பகுதியில் ஜமா கேலி செய்து கெக்கலிக்கும். எதற்கு இப்படி இவர் வரும்போதே அவர்களும் வந்தார்களென்றால், இவர் விடை கொண்டபின் ருசி ருசியான ப்ரஸாதங்கள் அவர்களுக்கும் வரும். அதற்காகத்தான்.ஸ்வாமியும்கூடுதலாகவே கொடுத்துவிட்டுப் போயிருப்பார்.

"எத்தனை பேர் வந்தால் அவருக்கென்ன கவலை? என்ன நஷ்டம்? ஸௌகார்பேட்டில் எந்த ஸேட்ஜியின் கடையிலிருந்து, ஸ்ருஷ்டி என்றபெயரில், ஆவிகளைக்கொண்டு அபேஸ் செய்தாரோ அந்த ஆளுக்குத்தானே கஷ்டமும் நஷ்டமும்?" என்று சொல்லிக் கொண்டே ஜமா தின்பண்டங்களை ஜமாய்க்கும்.



அப்புறம் அன்பு மூர்த்திக்கு ஸி. டி. ஆர். அடிமையான காலமும் வந்தது. அன்பு மூர்த்தி, கையில் "வந்த" மைஸூர்ப்பாகை அடியாரின் கையில் வைத்தார். பாகாகப் பகர்ந்தார்: "பங்காரு! ஸௌகார்பேட் ஸேட்ஜியிடமிருந்து அபேஸ் பண்ணினதில்லை. 'ப்யூர் லவ்' பண்ணினது" என்றார். சொன்னதும் அதுதான்!

"ப்ரேம சக்தி என்னதான் பண்ணாது? அதைவிட ஸ்வீட் எதுவுமில்லாத போது, அதிலிருந்து ஸ்வீட்ஸ் ஏன் வராது?" எனக் கேட்டு, மதுர மோஹனக் குரலில்,

"மதுரம் மதுரம் மதுரம் மதுரம்
மதுராதிபதே: அகிலம் மதுரம்."

என்று பாடியவாறு மந்தமாருதமாக நகர்ந்தார்.

ஒருத்தி எத்தனை கொடியவளானாலும் தாயன்பில் பால் சுரக்கவில்லையா? இத்தனைக்கும் தாயாகி இவற்றுக்கான பல்வித உணவும் சுரக்கும் மஹாமாதாவின் ப்ரேமையில் ஒன்றியவர்கள் நினைத்ததைச் சுரக்கும்ஸுரபியாகி மக்களை இன்புறுத்த முடியுமென்பது— யோசித்துப் பார்த்தால், அதிசயமா என்ன? மறந்து விடாதீர்கள், அந்த மஹாமாதாவும் பாலையாகிக் குழந்தைக் கூத்தடிப்பவள்தான்!

******

அன்பு ஸித்தியில் ஸ்வாமி சுரக்கும் 'சித்ர கூடத்'தில் அல்லவா இருந்தோம்? ஓவியர் ஜான் ஓபீயிடம், யாரோ, 'உங்கள் பெயின்ட்களை எதில் மிக்ஸ் செய்கிறீர்கள்?' என்று கேட்டாராம். அதற்கு அவர், "என் மூளையில் ஸார்" என்றாராம்! 'சிந்தனை' பெயின்டை 'இதய'த்தில் மிக்ஸ் செய்து 'அத்புத' தூரிகை கொண்டு 'விளையாடல்' சிலையில் வரைகிறார் ஸ்வாமி!

பர்த்திக் கல்லூரியில் ஆசிரியராக அமர்ந்த புது பக்தர் ஒருவர், ஸ்வாமி படம் வாங்கி வந்து தமதறையில் வைத்தார். திடுமென, 'இதை வாங்கினேனே! ஸ்வாமி நேரே பாராமல் எங்கோ பார்க்கும் 'போஸா'க இருக்கே!' என்ற குறை தோன்றிவிட்டது.

எங்கோ சென்று திரும்பினார்.

பட ஸ்வாமி பாராமுகம் திருப்பி அவரை நேரே நோக்கி வரவேற்றார்!

******

ஷீர்டி ஸாயியாயிருந்து தற்போது பர்த்தி ஸாயியாயுள்ளதாம்,மீண்டும்கர்நாடகமண்டயத்தில் ப்ரேம ஸாயியாய்த் தோன்றப் போவதாக ஸ்வாமி கூறுவதை பக்தர் அறி

# அது நானேதான்!

• பெங்களூர் நகரை அழகு படுத்தும் திட்டம் பற்றிப் பேச்சு வார்த்தைகள் நடந்த போது கர்நாடகச் செய்தித் துறை அமைச்சர் ஜீவராஜ் ஆல்வா கூறியது: "இந்த நகரில் உள்ள 'பெங்களூர் அரண்மனையின் சுவர்களில் அரசியல் சுவரொட்டிகளை ஒட்டி அசிங்கப்படுத்தியது நான்தான்! இனி என் கட்சிக்காரர்கள் சுவரொட்டிகளை ஒட்டியும்பிரசாரங்களை எழுதியும் சுவர்களை அசிங்கப்படுத்தாமல் பார்த்துக் கொள்கிறேன்!"

• கர்நாடகாவில் கோகக் என்ற நகரிலுள்ள ஜனதா எம். எல். ஏ. ஒருவர் திடீரென்று ஒருநாள் அவ்வூர் டெலிபோன் எக்ஸ்சேஞ்சின் ஸ்விட்ச் ரூமுக்குள் நுழைந்தார். தனியாக அல்ல; ஐம்பது ஆதரவாளர்களுடன்! "என் வீட்டில் உள்ள டெலிபோன் சரியாக வேலை செய்யவில்லை; அதை சரி பண்ணு விட்டால் உங்களை உதைப்பேன், அடிப்பேன்!" என்றெல்லாம் மிரட்டினார். அவ்வூர்போலிஸார், தாசில்தார் எல்லோரும் அவரைச் சமாதானப்படுத்த முயன்றார்கள். அவர்களையும் மிரட்டினார் அவர்! இப்போது... அங்குள்ள டெலிபோன் இலாகா ஊழியர் சங்கம் 'அந்த எம். எல். ஏ. வீட்டு டெலிபோன் இணைப்பைத் துண்டித்துவிட வேண்டும்' என்று கோரிக்கை விடப் போகிறார்களாம்!

— அனிதா ராமச்சந்திரன்

வர். ஜான் ஹிஸ்லாப்புக்கு அவர் 'மெடீரியலைஸ்' செய்தளித்த மோதிரத்தின் பாதுளை முத்தளவுள்ள கல்லுக்குள் — நாற்பதாண்டுகட்குப் பின் வரப் போகும் ப்ரேமை ஸாயியின் முகம் தெரிந்தது! அது மட்டுமில்லை. ஸ்வாமி அளித்தபோது முகத்தின் வலப்புறமே தெரிந்தது. அதன்பின் அந்தக் குட்டி மூர்த்தி தினந்தினம் மில்லியிலும் மில்லிமீட்டராகத் திரும்பி, சில மாதங்களுக்குப் பின் இடப்புறமும் காட்டலானார்!

* * * * * *

ஆர். ஆர். ஸிக்கு ஸ்வாமி அளித்த மோதிரத்தில் ஸ்வாமி படம் பதித்திருந்தது. மோதிர ஸ்வாமி மஹா வேடிக்கை செய்தார். மோதிரத்தை கடிகாரமாக்கி, தாமே மணி காட்டும் முள்ளானார்! ஆம், பகலும் இரவும் பன்னிரண்டு மணிக்கு ஸ்வாமியின் நடுத்தலையுச்சி ஸரியாக அவ்வேளையில், மணிமுள் இருக்க வேண்டியபடி மோதிரத்தின் உச்சியைத் தொட்டபடி நேரே இருக்கும். அணிந்துள்ள ஆர். ஆர். ஸி. யும் அறியாதவாறு மோதிர ஸ்வாமி ஸெகண்டுக்கு ஸெகண்ட் நகர்ந்து, ஒரு மணி, இரண்டு மணிக்குப் பல கட்டங்களில் அழகாய் சாய்ந்து, மூன்றுக்குக் குறுக்கே பள்ளி கொண்டு, ஆறுக்குத் தலை கீழாகிவிடுவார்! அன்பு விளையாட்டில் தலை கால் புரியாதவர்! மறுபாதியிலும் பலவித கரணங்கள், அழகுச் சாய்ப்புக்கள் காட்டிக் கொண்டே போய்க் கரெக்டாகப் பன்னிரண்டுக்கு நேர்த் தோற்றம் கொண்டுவிடுவார். இப்படிப் பன்னிரண்டு ஆண்டுகளாக்கும் சுற்றிச் சுற்றி விளையாடிற்று குழந்தை ஸ்வாமி!

குடும்பத்தினர் தவிர எவருக்கும் இதை ஆர். ஆர். ஸி. தெரிவிக்காமல் பன்னிராண்டு அக்ஞாதவாசமாகவே காத்து வந்தார். அப்புறம் நண்பர்கள், ஸாயிவட்டம் என்று தெரியத் தொடங்கி அவர்கள் வந்தார்களோ இல்லையோ, குழந்தைக்கு ஒரே வெட்கமாய்ப் போச்சு! விளையாட்டை நிறுத்திவிட்டது!

"நீ வெறும் படம்தானா? அதோ அந்தத் தாரகை போலவும், இதோ இந்த மண் போலவும் உனக்கு உயிர்ப்பு இல்லையா?" என்று டாகூர் கேட்டார். உடனே உயிர்ப்பை உணர்ந்தார். "நீ வெறும்படமில்லை" என்றார். அந்தக் கவிதைக்குப் பெயர் "ப்ரியனின் அன்பளிப்பு." நம் ப்ரியனின் அன்பளிப்புக்களில் அவனது உயிர்ப்பு துடிக்கும் கவிதையை என் சொல்ல?

* * * * * *

கவிதை கடிதமாகவும் ஆகும். புதிதாகப் படம் உண்டாக்கித் தருவது மட்டுமின்றி, சிலருக்குப் படத்திலிருந்தே கடிதம் போடுகிறார்! இப்படித் தமிழ் உள்படப் பல மொழிகளில் பக்தர்கள் பெற்றிருப்பதில் ரஸமான ஒன்றோடு இவ்வாரம் முடித்து, அடுத்த வாரம் பாயஸம் கிடைக்குமா பார்ப்போம்.

என்ன ரஸம் என்றால் மிளகு ரஸம்.

சென்னையில் ஓர் அன்பர் வீட்டில் 'படக் கடிதம்' வருகிறது. தாம்விளையாட்டுப்பிள்ளை என்பதால் அவ்வீட்டுச் சிறுவனுக்கே "எழுது" கிறார்.

ஒருநாள் மிளகு ரஸமும், வறுவலும், கேட்டுப் பையனுக்குக் கடிதம் போட்டார் — படத்திலிருந்து போட்டார்! ("ஏன்?" என்றால், "விளையாட்டில் ஏன் இந்த 'ஏன்'?" என்று கேட்க வேண்டியதுதான்!)

அப்படியே செய்து படத்தின் முன் வைத்தார்கள். சிறிது போதில் ரஸத்தின் அளவு குறைந்தது. வறுவலில் சில மறைந்தன.

கடிதம் விழுந்தது. "சிப்ஸுக்குக் காரம் போதவில்லை" என்று!

பையன் மிளகுபொடி தூவினான்.

"இப்போது நன்றாயிருக்கிறது" என்று இன்ஸ்டன்ட் — கடிதம் வந்தது.

'ரஸத்தைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லையே?' என்று எண்ணினார்கள்.

"சுமார்" என்று மார்க் போட்டுக் கடிதத் துண்டு விழுந்தது. ரஸிகரிடமிருந்து!

(தொடரும்)

பம்பாய்—19. * லதா கிருஷ்ணன், பிளாட் நெ. 20, காமதேனு கோ—ஆப். பெஸ்டம் சாகர், செம்பூர், பம்பாய்—89, (கிளாஸ் பாக்டரி அருகில்). * ஜெயஸ்ரீ, 2—A, தேசப்பிரியா ரோடு, கல்கத்தா—26. * S. பொன்னப்பன், 8—3—282, 2—வது பஜார், செகந்திரா பாத், போன்: 559562. திருமதி. T. S. சகுந்தலா சீனிவாசன், 18/1—A, லால்பாக் போர்ட் ரோடு, (மினர்வா & பஸப்பா சர்க்கிள் மத்தியில்) பெங்களூர்—4, போன்: 224357. * திருமதி. துர்காம்பாள், 5—A, ராமசந்திரபுரம், தென்னூர், திருச்சி. * திரு. S. சேதுராமன், 9, பாணு துரை சன்னதி தெரு, கும்பகோணம்—612001. போன்: 972. * ராணி சில்க், 13, மஹால் 4வது தெரு, மதுரை—1. போன்: 26295. * திருமதி. S. லெட்சுமி, 24. சீனிவாசா தெரு, சேலம்—1. (ரயில்வே ஸ்டேஷன் அருகில்). * ஸ்ரீ காமேஸ்வரி ஏஜென்சிஸ், 6/175, திருச்சி ரோடு, (ஆல் இந்தியா ரேடியோ அருகில்) ராமநாத புரம், கோயம்புத்தூர்—641018. * மஹாலட்சுமி சில்க் சென்டர், தீன் பில்டிங், (உள்புறம்) 175/11, மேல வீதி, சிதம்பரம். * ஹேமாவதி ஏஜென்சிஸ், 2711, நாணயக்கார செட்டி தெரு, தஞ்சாவூர். * பாகீரதி மூர்த்தி, 100, ஸ்ரீ வராஹபுரம் தெரு, கல்லிடைக்குறிச்சி, திருநெல் வேலி. * S. சுந்தரம், 9, சாத்தான் கோவில் தெரு, வடிவீச்வரம், நாகர் கோவில்—2. * திருமதி. K. சீதாலட்சுமி, 41, 4—வது டிரஸ்ட் கிராஸ் தெரு, மந்தைவெளிப்பாக்கம், சென்னை—28. போன்: 73244, * திருமதி. சாவித்திரி பாலசுப்பிரமணியம், 2, 7—வது தெரு, நங்கநல்லூர், சென்னை—61, (பிள்ளையார் கோவில் அருகில்). போன்: 433737. * திருமதி. சரோஜா கிருஷ்ணமூர்த்தி, A—9/386, புதிய குடியிருப்பு, (முதல் மாடி), குடிசை மாற்று வாரியம், திரு மங்கலம், அண்ணா நகர் மேற்கு, சென்னை—600107. (ஸ்ரீ சத்திய சாயி பாபா கோவில் அருகில்) * M/S. பாலாஜி கிளாத் சென்டர், 29. வெங்கடேச சௌத்ரி ரோடு, மேற்கு தாம்பரம், சென்னை—45.

**குறிப்பு: சென்னை நகரில் எந்தக் கடைகளுக்கும் எங்கள் புடவைகள் சப்ளை கிடையாது. மற்ற இடங்களில் வாங்குவது எங்களுடைய தயாரிப்பு அல்ல.**

* எம். ஜி. சேதுராமன், திருமழிசை.

? கல்கி தலையங்கத்துக்குப் பதில் கூறுவது போலப் பொன்னையன், 'நீதிபதிகள் நியமனத்தில் தாமதத்துக்கு மத்திய அரசுதான் காரணம்' என்று கூறியுள்ளாரே?

! (அ) மத்திய அரசின் மீது பொறுப்பைச் சுமத்தி விட்டு மாநில அமைச்சர் தப்பித்துக் கொள்ள முடியாது. புதுதில்லியின் தாமதத்துக்கும் இடம் கொடுக்காத வகையில் மாநில அமைச்சர்கள் நடந்து கொள்வதுதான் சாமர்த்தியம். (ஆ) நீதிபதிகள் நியமனத்தில் தாமதம் என்பது ஓர் உதாரணம்தான். அது போல் எத்தனையோ. தலையங்கம் இன்றைய நிலைமையை, தமிழக அரசின் பொதுவான மெத்தெனப் போக்கைக் குறித்து எழுதப்பட்டது.

* க. பாண்டியன், பங்களூர்.

? பிளேபாய் பத்திரிகை காந்தியடிகளை பீர் குடிப்பவராகச் சித்திரித்துக் காட்டியதற்கும் ஆதவன் கல்கியில் அம்பேத்காரை பி. டி. எஸ். பஸ்ஸுக்கு நிற்பதாகக் குறிப்பிட்டதற்கும் என்ன வேறுபாட்டைக் காண்கிறீர்கள்?

! மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசமிருக்கிறது. முன்னது காந்தியடிகளை விரசமான முறையில் வேண்டுமென்றே இழிவுபடுத்துகிற குரூர ஹாஸ்யம். பின்னதில் அம்பேத்காரைக் கேலி செய்கிற எண்ணம் துளியும் இல்லை. பஸ் ஸ்டாப்பில் தவமிருக்கும் மக்களின் நிலையைச் சிலையுடன் ஒப்பிடுகிற குற்றமற்ற ஹாஸ்யம் அது.

* ஆ. வாஞெலிதாசன், மதுக்கூர்.

? தமிழக அரசியலில் அமைச்சர் ஆர். எம். வீ.யின் தற்போதைய அந்தஸ்து என்ன?

! சமீபத்தில் அமைச்சர் எழுதிய ஒரு புத்தகத்தின் வெளியீட்டு விழா நடந்தது. சட்டமன்ற உறுப்பினர்கள், முக்கியஸ்தர்கள் என்று பலர் மேடை ஏறி ஒவ்வொருவரும் ஐம்பது, நூறு என்று பிரதிகளை விலை கொடுத்து வாங்கிக் கொண்டார்கள். கிட்டத்தட்ட 1500 பிரதிகள் விழாவிலேயே விற்பனை! அந்தஸ்து புரிகிறதா? நிற்க. புத்தகத்தை வெளியிட்ட சாமர்த்தியசாலி, அருணோதயம் அருணன்.

* வீ. ரவிகுமார், லால்குடி.

? சாவிற்குப் பயப்படாதவர்கள். (விடுதலைப்புலிகளைத் தவிர) யாரேனும் இருக்கிறார்களா?

* முதல் மரியாதை





* நகைக்கவல்ல நட்பு.

! ஏன் சாவி இருக்கிறாரே! பங்களூரில் நெஞ்சு வலி ஏற்படுகிறது. லட்சியம் பண்ண வேண்டுமே! ஊஹும்! சுஜாதாதான் "அலட்சியப்படுத்தக் கூடாது உடனே கவனியுங்கள்" என்கிறார். சென்னை அப்போலோவில் மூன்று இடங்களில் ரத்த நாளத்தில் அடைப்பு இருப்பதாகக் கண்டுபிடிக்கிறார்கள். இருதயத் தசைகளுக்கு ரத்தம் கொண்டு செல்கிற நாளம். 'பைபாஸ் சர்ஜரி' செய்ய வேண்டும் என்று முடிவு செய்கிறார்கள். மனுஷன் கொஞ்சமாவது கலங்க வேண்டுமே? ஆபரேஷனுக்கு நாள் குறித்து விட்டு வந்து சாவி சுதந்திர தின மலர் கட்டுரைக்காகக் கல்கி ஆசிரியருக்குப் ஃபோன் பண்ணுகிறார். "இன்னும் இரண்டு நாளில் அட்மிட் ஆகிறேன். இப்பத்தான் இதையெல்லாம் சகஜமாகச் செய்யறாங்களே ஒண்ணும் கவலை இல்லை" என்று சாவி ராஜேந்திரனுக்குத் தைரியம் சொல்கிறார்! ஆபரேஷன் முடிந்து தீவிர கவனிப்புப் பிரிவில் இருக்கும்போது கூட ராணி மைந்தனிடம் "கட்டுரைகள் வந்தாயிற்றா?. லே அவுட்கள் ரெடியா?" என்று கேட்கிறார். சில தினங்கள் சென்று வீட்டில் ராஜேந்திரன் போய்ப் பார்க்கிறார். "அதிகம் பேச வேண்டாம்" என்று வேண்டுகோள் விடுக்கிறார். "இந்த ஆபரேஷன் ஸீரியஸ்தான்; ஆனால் பேசலாம், பாதகமில்லை!" என்று பதில் வருகிறது! உதவியாளரிடம் புரூப்களைப் படிக்கச் சொல்லிக் கேட்கிறார்; திருத்தங்களைக் கூறுகிறார். இப்போது வீட்டுக்குள்ளேயே நடமாட ஆரம்பித்துள்ள சாவிக்குள்ள மனோதிடத்தையும் கடமையுணர்வையும் வேறொருவரிடம் காண்பது அரிது.

* ஒப்பிட்ட போஸ்டர்.





* குற்றமற்ற ஹாஸ்யம்.

* ஆர். சுரேஷ், ஈரோடு.*

? தமிழக முதல்வர் மற்றும் அமைச்சர்களின் சொத்து மதிப்பு என்ன?

! ஏழு கடல் தாண்டி, எட்டு மலை தாண்டி, நெருப்பு அகழிக்கு நடுவே ஒரு மெழுகுக் கோட்டையாம். அதன் நடுவில் ஒரு ராஜகுமாரியாம். அவள் கையில் ஒரு பச்சைக் கிளியாம். கிளியின் கழுத்தில் ஒரு குப்பி கட்டித் தொங்குகிறதாம். அந்தக் குப்பிக்குள்

பத்திரப்படுத்தப்பட்டுள்ள ரகசியமாம்! பதவி ஏற்குமுன் சொத்துக்கணக்குக் கொடுப்பதாகச் சொன்னதெல்லாம் காற்றோடு போனது!

* என். உலகநாதன், லால்குடி.

? கமலுடன் ஒப்பிட்டு சோவைப் பற்றி வெளிவந்த போஸ்டர் குறித்து...?

! பேடித்தனம். மொட்டைக் கடிதாசுக்கு யாராவது மதிப்புக் கொடுப்பார்களா!

* ஜி. ராஜசேகரன், வலங்கைமான்.

? நம் நாட்டில் உள்ள பற்றாக் குறைகள் நீங்க எவ்வளவு காலமாகும்?

! பற்றாக்குறை என்பது எத்தனை காலமானாலும் நீங்காது. கிடைக்கக் கிடைக்க இன்னும் வேண்டும் என்ற எண்ணமும் எனவே பற்றாக் குறையும் இருந்து கொண்டேதான் இருக்கும். இந்த ஆசையும் ஆர்வமும்தான் நாட்டின் வளர்ச்சிக்கும் மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்வதற்கும் அடிப்படை. மக்களின் இந்த ஆர்வத்தைப் புத்திசாலித்தனமாகப் பயன்படுத்திக் கொள்ளும் ஆற்றல் மிக்க தலைவர்களைக் கொண்ட நாடு சீக்கிரமாக முன்னேறுகிறது. ஆனால் எவ்வளவு முன்னேறிய நாட்டுக்கும் ஏதேனும் சில அம்சங்களில் பற்றாக் குறை உண்டு!

* எம். ராஜேந்திரன், லால்குடி.

? எம். ஜி. ஆரை வாய் நிறையப் புகழ்ந்த கல்கி இப்போது வாய் கிழியக் குறை கூறுவது ஏன்?

! அன்பு காரணமாகவும், நட்பு காரணமாகவும்தான். "நகுதற் பொருட்டன்று நட்பு: மிகுதிக்கண் மேற்சென் றிடித்தற் பொருட்டு" என்ற குறளை அறிந்திருப்பதால்தான். அன்று புகழவும் இன்று குறை கூறவும் தக்க காரணங்கள் இருப்பதால்தான்.

* ஆர். ஆனந்த், கும்பகோணம்.

? சமீப காலத்தில் கொலை, கற்பழிப்பு, மழையில் டூயட், அரைகுறை ஆடை லோஹிப் இவை இல்லாமல் படம் பார்த்த நினைவு இருக்கிறதா?

! முதல் மரியாதை பார்த்து, ஒரு நல்ல, தரமான, எல்லா அம்சங்களிலும் சிறந்த ஒரு தமிழ்ப்படம் பார்த்த பூர்ண திருப்தியுடன் இருக்கிறேன். பாரதிராஜாவின் முதல் மரியாதை சிவாஜிக்கு அளிக்கப்படலாம். என் முதல் மரியாதை பாரதிராஜாவுக்குத்தான்.

* ஜா. பாபு, நீடாமங்கலம்.

? பஞ்சாயத்துத் தேர்தல், இம்பு பேச்சு வார்த்தை ஒப்பிடுக!

! முன்னது திட்டமிட்டு ஒத்திப் போடப்படுகிறது; பின்னது திட்டமிட்டு முறிக்கப்படுகிறது — சுயநலக்காரர்களால்.

* என். செந்தில்குமார், மயிலாடுதுறை.

? உடல் மண்ணுக்கு, உங்கள் உயிர்?

# ஆர்.எம்.வீ.யின் தற்போதைய அந்தஸ்து என்ன?


* அந்தஸ்து என்ன?

! நிச்சயம் சிறை செல்கிற அல்லது நோய் வாய்ப்படுகிற தமிழகத் தலைவர்களுக்காக அல்ல!

* இளங்கோவன், சென்னை—19.

? ஒரு குடும்பத்துக்கு ஒரு வீடு என்ற திட்டம் இந்தியாவில் கொண்டு வரப்படுமா?

! சரிதான், அப்புறம் சின்ன வீடு ஒன்று கேட்க மாட்டீர்களே?

* ஜோசப், புதுவை.

? தற்போது நிலவும் அரசியலையும் தெருக் கூத்தையும் ஒப்பிடுக.

! தெருக் கூத்து நடத்துபவர்கள் வறுமையில் வாடினாலும் தர்மத்தைப் போதிக்கிறார்கள். அரசியல்வாதிகளோ செல்வத்தை நாடி அதர்மப்பாதையில் செல்கிறார்கள்.

* அஞ்சாநெஞ்சினர்.



* பதில் கூறினர்.



---

* ரூ. 10 பரிசு பெறுபவர்:

ஆர். சுரேஷ்,
5, ராஜ வீதி,
பள்ளிப் பாளையம்,
ஈரோடு—638 006.


என்னதிது?... பொம்மைக்குப் பதிலா தடித் தடியா இந்தப் பொண்ணுங்க ஏறி உட்கார்ந் திண்டிருக்குகள்!
அவா குடும்பத்துலே இவ்வளவு ராகமாலிகா பட்டுப் புடவை களும் பாவாடைகளும் இருக்கு துன்னு நமக்கெல்லாம் தெரிய ணும்னுதான் இதெல்லாம்!
UMA FEATURES

ஒரு கமகமக்கும் கட்டுரை!

* சந்தனக் கட்டைகளைத் துலக்குதல்

"இதுதான் சந்தன மரம்" என்றார். என் மூக்கால் மரத்துக்கு முத்தம் கொடுத்த போது, ஊகூம்.... வாசனை தெரியவில்லை. 'கற்பூர வாசனை' பழமொழி ஞாபகத்துக்கு வர சிரித்துக் கொண்டேன். 'இது பத்து வருஷத்து மரம். வாசனைவர நாற்பது நாற்பத்தைந்து வருஷமாவது ஆகும்' என்றார் கூட வந்த அதிகாரி. நல்லவேளை தப்பினேன் என்று நினைத்துக் கொண்டேன்.

பெரிய பெரிய கட்டைகளைச் சுக்குசுக்காக உடைக்க ஒரு பெரிய மெஷின். பிறகு சிகைக்காய் அரைக்கிற மாதிரி, பெரிய உருவத்தில் ஒரு மெஷின். சந்தனப் பொடி நேரே நீராவியுடன் சரசமாடப் போகிறது, பெரிய பெரிய சிலிண்டர்களில். பின்னர் குளிர்விக்கப்பட்டு, தண்ணீராகவும், எண்ணெய்யாகவும் டாங்க்கில் நிரம்புகிறது. இன்னொரு பக்கத்தில் தவிடு போல சந்தன மரத்தூள் வந்து மலையாய்க் குவிகிறது.

பெரிய லிட்டர் படியை வைத்து, மிதக்கிற எண்ணெயை மொண்டு, இன்னொரு பாத்திரத்தில் கொட்டி, மறுபடி அதைச் சுத்தப்படுத்துகிறார்கள்.

ஒரு வழியாய் எல்லாம் முடிந்து, சுத்தமான சந்தன எண்ணெய் கிடைக்கிறது. பாட்டில்களில் அடைக்கப்படுகிறது. மணம் ஆளைத் தூக்குகிறது! ஒரு சின்ன பாட்டில் சந்தன எண்ணெய் விலை — கேட்டால் மயக்கம் வருகிறது!



* சந்தன மரம்

# மணக்கும் தொழிற்சாலை!

"ஏன் சார்! இந்த மாதிரி பெரிய பெரிய கட்டைகளை எண்ணெய்க்காகச் சிதைக்கிறீர்களே! உருப்படியாய்க் கலைப் பொருட்கள் செய்தபின், சிதறி விழும் மரச் சிப்ஸ்களை, எண்ணெய் எடுக்கப் பயன்படுத்தலாமே!" என்றேன்.

ஒரு மாதிரியாய்ப் பார்த்தார். சந்தன மரங்களில்பலஜாதிகள் உண்டாம்.(ஐயகோ! இதில் கூடவா ஜாதி?) முதல் தரமானவை சிற்பங்கள், கலைப் பொருட்களுக்குப் போய் விட, கடை ஜாதி மரங்கள்தான் இங்கே வருமாம்.

பாதுகாப்பு அதிகாரி, "இப்போது சந்தன மரம் அரசாங்கத்தின் முழுக் கட்டுப்பாட்டில் உள்ளது. சந்தன மர ஏற்றுமதி முன்பு அனுமதிக்கப்பட்டது. இப்போது தடை செய்து விட்டனர்" என்றார். "அதனால்தான் சந்தன மரக் கடத்தல் இப்போது அதிகமாகிவிட்டதா?" என்பதற்குப் பதில் ஒரு மழுப்பல் சிரிப்பு.

சந்தன எண்ணெய்க்கு ஏகப்பட்ட கிராக்கி அயல்நாடுகளில். இதனால் அரசாங்கத்துக்கு நல்ல வரும்படி. இடையில், சந்தன எண்ணெய்க்கு இணையான செயற்கை சமாச்சாரம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால் அது நாளடைவில் ஒரிஜனலுடன் போட்டி போட முடியாமல் ஜகா வாங்கிவிட்டதாம்.

தனியாருக்குச் சொந்தமான பகுதியில் சந்தன மரம் வளர்ந்தால் அதைக் கூடக் காட்டிலாக்காவில் பதிவு செய்துவிட வேண்டும். இடையே புயல், வெள்ளம் வேறு காரணங்களால் மரத்துக்கு ஏதாவது ஆகிவிட்டால் உடனே காட்டிலாக்காவில் சொன்னால் எடுத்துக் கொண்டு போக ஏற்பாடு பண்ணுவார்கள். நல்ல முழுமையாய் வளர்ந்தால், காட்டிலாக்காவினர் மரத்தை எடுத்துக் கொண்டு, கண்ணும் கருத்துமாய் வளர்த்த சிரமத்துக்குச் சன்மானம் தருவார்கள். (சந்தன மர மதிப்புடன் ஒப்பிடும்போது இந்த சன்மானம் தூசு பெறுது என்பது வேறு விஷயம்).

சுற்றிப் பார்த்துவிட்டு, அதிகாரியிடம், "சந்தன எண்ணெய்யின் ரம்யமான மணத்தை முகரும் மகிழ்ச்சியை நாங்கள் பெறலாமா?" என்றேன் ஆங்கிலத்தில் நாசூக்காய். "ஓஷ்யூர்!" என்று சொல்லி, சாம்பிள் பாட்டில்களைக் கொண்டு வரச் சொன்னார். ஆளுக்கு ஒரு சின்ன பாட்டில் தரப் போகிறார் என எதிர்பார்த்தால் ஒரு பாட்டிலைத் திறந்து, ஒரு குச்சியால் எண்ணெய்யைத் தொட்டு, ஒவ்வொருத்தர் புறங்கையிலும், லேசாய்த் தடவி, "கம் ஆன்! ஸ்மெல் இட்!" என்றபோது, சப்பென்றாகிவிட்டது. ஆனாலும் புறங்கையை முகர்ந்தபடியே புறப்பட்டோம்.

—ஜூலி.



# பாக்யராஜ் பதில்கள்

எஸ். சுப்ரமணியன், சென்னை

* ஜெயகாந்தனின் நாவல்களைப் படமாக்கும் உத்தேசம் உண்டா?

சிலரால் படிப்பு வளரும்; சிலரால் பண்பாடு வளரும்; சிலரால் பகுத்தறிவு வளரும்; ஆனால் ஜெயகாந்தன் அவர்களால் மனிதர்கள் வளருவார்கள்.

அவரது ஜீவனான சிந்தனைகளைச் சமூகத்தின் எல்லாத் தரப்பிற்கும் எடுத்துச் செல்ல எனக்கு ஆசைதான். ஆனால் எடுத்துச் செல்பவர்கள் அங்கங்கே ஜீவனையும் சேர்த்து எடுத்து விடுவார்களோ என்று அவர் சந்தேகப்படுகிறார்.

பி. ஆர். ஸ்ரீனிவாசன், வேலூர் (சேலம்).

* பயப்படாமல்,கேள்வியைத் தவிர்க்காமல் சொல்லுங்கள் பார்க்கலாம். நடிப்பில் சிவாஜிக்கு அடுத்தபடியாகத்தானே எம். ஜி. ஆர்?

தப்பு பண்றீங்களே சார், கேள்வியைத் தெளிவாகக் கேட்க வேண்டாமா? நடிப்பில் ஹாஸ்யமான நடிப்பு; உணர்ச்சிகரமான நடிப்பு; ஜனரஞ்சகமான நடிப்பு; இப்படிப் பல பிரிவு இருக்கு! அதிலே எதிலேன்னு கேக்காம விட்டுட்டீங்களே!

(நீக்குபெப்பே....நீதாத்தாக்குப்பெப்பே)

ஜே. மீனாட்சி, பம்பாய்.

* ரசிகர்கள் உங்களை எப்படி அழைப்பதை விரும்புகிறீர்கள்? சிறந்த இயக்குனர் என்று? சிறந்த வசன கர்த்தா என்று? அல்லது சிறந்த நடிகர் என்று?

ஊட்டி பிளவர் ஷோவில் கலர் கலரா பல ஜாதி பூ இருக்கும். வர்றவங்க அவங்க வங்க டேஸ்ட்டுக்குத் தகுந்த மாதிரிதான் ரசிப்பாங்க.

(பின்குறிப்பு: சில பேர் வர்றவங்களையும் ரசிப்பதுண்டு).

ஏ. பாஸ்கர், அரக்கோணம்.

* உங்கள் நெஞ்சில் ஆழப் பதிந்த உருக்கமான சம்பவம் ஏதாவது உண்டா?

ஏராளமாக உண்டு. ஒரு சமீபத்திய நிகழ்ச்சி. வயதுக்கு வந்த இரண்டு சின்னஞ் சிறுசுகள்; தவிர்க்க முடியாத குடும்பச் சூழ்நிலை; அதோடு சினிமா ஆசையில் என்னைத் தேடிச் சென்னைக்கு வந்தனர். அவர்களைப் புத்திமதி கூறித் திருப்பி அனுப்புமாறு சமூகத்தின் கட்டுப்பாடு என்னைத் தூண்டியது. ஆனால் மனசாட்சியோ 'வீட்டை விட்டு ஓடி வந்த வயது வந்த பெண்கள், மீண்டும் ஊருக்குத் திரும்பினால் ஊர் வாய் அவர்களை விட்டு வைக்குமா?' என்று அச்சுறுத்தியது. நான் அவர்களுக்கு அறிவுரை கூறி இங்கேயே ஏதாவது ஒரு வேலை வாய்ப்பை ஏற்படுத்தலாம் என நினைக்க, சுற்றி இருந்தவர்களோ, 'ஒருவேளை நாளை அந்தப் பெண்களின் பெற்றோர் போலீஸ் ரிப்போர்ட் கொடுத்து உன் அடைக்கலத்தில் இருப்பதாக விளம்பரம் ஆனால் விபரீதமான கோணங்களில் நீ விமர்சிக்கப்படுவாய்' என்று கண்டிப்புடன் மறுத்தனர். சமூகத்திற்குப் பயந்து அந்தப் பெண்களை நேரடியாக அவர்கள் பெற்றோர்களிடமே பத்திரமாக ஒப்படைத்தேன். இரண்டு நாட்கள் காணாமல் போன அந்த இளம் பெண்கள் ஊரில்

எவ்வளவு கொடுமையாக விமர்சிக்கப் பட்டனரோ தெரியவில்லே! இரண்டு மாதத்தில் அவர்கள் இருவரும் கிணற்றில் குதித்துத் தற்கொலே செய்து கொண்டதாகப் பத்திரிகை மூலம் அறிந்தேன். பாக்யராஜ் என்ற பெயர் சமூகத்தில் களங்கப்பட்டு விடும் என்ற பயத்தில் இரண்டு சின்னஞ்சிறுசுகளேப் பலி கொடுக்க நேர்ந்தது.

ஜே. ஜாபர் பாஷா, குடியாத்தம்.

* ''ஒரு மனிதனுக்குத் தேவையான அனைத்தும் பெற்று விட்டோம்'' என்று திருப்தி அடைந்தது உண்டா?

'அழுக்குத் தீரக் குளிச்சவனும் இல்லே, ஆசை தீர அனுபவிச்சவனும் இல்லே'ன்னு உங்க ஊரு பக்கம் பழமொழி இல்லேயா?

சியாமளா இராமஸ்வாமி, சென்னே.

* ஒரு திரைப்படத்தின் ஸ்கிரிப்ட் முழுமையும் தயார் செய்து திட்டமிட்டு எடுக்கப்படும் எந்தத் திரைப்படமும் வெற்றி அடையும். தங்களுடைய வழி என்ன?

தயார் செய்வதும் சரி; திட்டமிடுவதும் சரி; சரக்கு எப்படிங்கறது சபைக்கு வந்தப்பறந்தானே தெரியும்!

ஆர். பொன்னம்மாள், சென்னே.

* அமரர் தேவனுடைய நாவல்கள் நகைச்சுவை மிகுந்தவை. அதிலுள்ள கதாநாயகப் பாத்திரம் உங்களுக்கேற்றவை. ஏன் நீங்கள் அவற்றைப் படமாகத் தயாரிக்கக் கூடாது? (உ-ம்) ஸ்ரீமான் சுதர்சனம்.

படிச்சுட்டுச் சொல்றேனுங்கம்மா!

எஸ். பிரபா, காரைக்குடி.

* தற்போதைய இளம் பெண்களிடம் தங்களேக் கவர்ந்த அம்சம் என்ன?

'ஐ லவ் யூ'ன்னு சொன்னு அடிக்கிற தில்லே! யோசிச்சுச் சொல்றேன்னு பதில் வருது. வரதட்சிணேக் கொடுமைக்கு வரவேற்கத்தக்க முன்னேற்றம்.

எஸ். சங்கர், முசிறி.

* நான் உங்களின் பரம ரசிகன். நீங்கள் எனக்காக இனி நடிப்பதைத் தயவு செய்து விட்டுவிடுங்கள். திரைக்கதை வசனம்டைரக்ஷன் மட்டும் மேற்கொண்டு என்னே மகிழ்ச்சியில் ஆழ்த்துவீர்களா?

சங்கரா! நான் பிடில் வாசிக்கிறது பிடிக்குதுங்கறே. ஆனு ஒரு கையால வாசி, இன்னெரு கையைப் பயன்படுத்தாதேன்னு சொன்னு எப்படி வாசிக்கிறது?

லீலாராம், தக்கலே.

* அன்பின் பாக்யராஜ்! தங்களேப் போன்று மலேயாளத் திரை உலகில் பல்வேறு துறைகளில் மின்னுகின்ற பாலசந்திர மேனன் பற்றி என்ன எண்ணுகிறீர்கள்?

பேரு வர்ற வரைக்கும் எல்லாரும் அடக்கமாத்தான் இருப்பாங்க. ஆனு பேரு வந்ததுக்கப்புறமும் அடக்கமா இருக்கிறது ஒரு சிலரால்தான் முடியும். அதில் அவர் பாராட்டுக்குரியவர்.




மங்களூர்காரர்களின் திருமணம் ஒன்றுக்குச் சென்றிருந்தபோது சில விசேஷமான அம்சங்களேப் பார்க்க முடிந்தது.

* அத்தனே பேரும் இலேயில் உட்கார்ந்ததும் ஒருவர் 'கோவிந்தா' என்று உரக்கச் சொல்ல, அதன்பின்தான் சாப்பிட ஆரம்பிக்கிருர்கள்.

* முதலில் சாதமும், அதை அடுத்து ரசமும் பரிமாறுகிருர்கள். ரசம் சாதம் சாப்பிட்ட பின்தான் பருப்பும் மற்ற சாம்பார் போன்றவையும் வரும்.

* சாப்பிட்டு முடிக்கையில் பெண் வீட்டாரும், பிள்ளே வீட்டாரும் சாப்பிடும் ஒவ்வொருவருக்கும் தட்சிணே தருவார்கள். இது அவரவர் தகுதிக்கேற்ப வேறுபடும்.

— ஜூலி

கு. கணேசன், சென்னே.

* பெரும்பாலான நட்சத்திரத் தம்பதிகளின் வாழ்க்கை இடையிலேயே முறிந்து விடுவதற்கு அடிப்படைக் காரணம் என்னவாக இருக்குமென்று கருதுகிறீர்கள்?

டிரைவரின் கவனக் குறைவால எத்தனேயோ வண்டிகள் பெட்ரோல் இல்லாம நடு ரோட்டில நிக்கறதுண்டு. அதை யாரும் பெரிசா வேடிக்கை பாக்கறதில்லே! ஆனு அதே உயர்ந்த ரக ஃபாரின் காரா இருந்துன்னு ஒரு மாதிரி சிரிப்போட, உள்ளே யாரு இருக்காங்கன்னு எட்டிப் பாக்கறோம். 'காரணம் — காரோட அந்தஸ்து கண்ணே உறுத்தினது! புருஷன் பொண்டாட்டிக்குள்ள தகராறும், விவாகரத்தும் பரவலா பல இடங்கள்ல தினமும் நடக்கறதா பத்திரிகைகள்ல படிக்கிறோம். ஆனு சினிமாக்காரங்கன்னு மட்டும் சீக்கிரமா சிரிக்கிற அளவுக்குச் சிக்கிக்கிறுங்க.

புருஷன் பொண்டாட்டி தகராறுக்கு அண்டர்ஸ்டாண்டிங் சரியில்லேங்கறதுதான் அடிப்படைக்காரணம். இவங்களுக்குமட்டும் புதுசா ஒரு காரணம் வந்திராது.

கே. குமார், மயிலாடுதுறை.

* பாக்யராஜ் சார்! கடவுள் உங்கள் எதிரில் வந்து ஏதாவது ஒரு வரம் கேள் என்ருல் என்ன வரம் கேட்பீர்கள்?

நான் எங்கையை ஊனி கரணம் போடுறேன். ஆனு கீழ எவனும் குழி வெட்டி வச்சிருக்காஞன்னு பாத்துச் சொல்லுங்கன்னு கேப்பேன்.

புகைப்படம்: மனோ.

# தமிழகம் ஒரு கலைப்பெட்டகம்

வானுயர்ந்த கோபுரங்களும்,
இதயங்கவரும் சிற்பங்களும்
கொண்ட கோயில்கள் மட்டு
மில்லை தமிழகத்தில்.

காணற்கரிய பல்வேறு
கவினுறு காட்சிகளும் இங்கு
ஏராளமாக உண்டு.

நீண்டு பரந்து கிடக்கும்
பொன்மணற் கடற்கரை,
மூன்று கடல்கள் முத்தமிடும்
குமரிமுனை, தாவிஓடும்
அருவிகள். துள்ளிவிழும்
நீர்வீழ்ச்சிகள், இதமளிக்கும்
குறிஞ்சிகர்கள், ஓய்விடங்கள்
— உல்லாச இடங்கள்

கண்ணைக்கவரும்
கைவினைப்பொருள்கள்,
கைத்தறி ஆடைகள், பட்டு
சேலைகள்.

பரவசமூட்டும் பரதநாட்டியம்
— இதமளிக்கும் கர்நாடக
இன்னிசை

செல்விருந்தோம்பி
வருவிருந்து நோக்கும் அன்பு
மிக்க தமிழ் உள்ளங்கள்.

வசதிக்கேற்ற வகை
வகையான ஓட்டல்கள்.
யாவற்றையும்

எளிதில் கண்டுகளிக்க
போக்குவரத்து வசதிகள்
எங்கும் உண்டு தமிழகத்தில்.
தமிழகம் வருக

*அது நீங்கள்*
*காணவேண்டிய மாநிலம்*



**சுற்றுலாத்துறை**
தமிழ்நாடு அரசு
சென்னை-600 009.

DIPR/1021/85 (R)



SAAGAR (ஹிந்தி)

இருபது வருடங்களுக்கு முந்திய 'சங்கம்' படத்தின் கதைதான் இந்தப் புதுப் பித்தளைக்கும் ஆதாரம் என்று சொல்லி அநாவசியப் பிரச்னைகளைக் கிளப்பாமல் நேரே விஷயத்திற்கு வருவோம்.

அட, டிம்பிள் கபாடியா (அல்லது கன்னா)வுக்கு, இன்னும் இளமை இருக்கிறது. பார்ப்பவர்களுக்கு இதில் சந்தேகம் வரக்கூடாது என்பதற்காக அந்தக் குளியல் காட்சி. விடியல் (அல்லது அந்தி) நேர சிகப்பும், அலை புரளும் கடலும், அரை உடையோடு டிம்பிள் மீனாகி நெளியும் லாகவமும், திறந்த கண்ணோடு மெய்ம்மறந்து நிற்கும் ரிஷிகபூரும்— அந்தக் காதல் அரும்பும் காட்சி ஓர் அழகான கவிதை.

பணக்கார ரிஷிகபூர் ஏழை மீனவப் பெண்ணைக் காதலிப்பதும், அவளோடு மேற்கொண்டு பழகினால் பொறுக்க மாட்டேன் என்று சொத்துக்காரப் பாட்டி மிரட்டுவதும் வாடிக்கை.

வாடிக்கையில்லாத ஒரு புத்துணர்ச்சி விஷயம்உண்டு: கமல்.சின்னவயதிலிருந்தே பழகிய மோனாவை நெஞ்சாரக் காதலித்து, அவள் தன் நண்பனைக் காதலிப்பது அறிந்து அவனுக்காக விட்டுக் கொடுக்கும் மாமூல் ரோல்தான் என்றாலும், கமல் புதுப் பரிமாணங்கள் தருகிறார். பேசும் ஹிந்தியில் அந்நிய மாநில நெடி இருந்தாலும், முகத்தின் இயல்பான பாவங்கள் ஹிந்தி சகாக்களை எங்கேயோ பின் தள்ளி விடுகிறது. சோகமான காட்சிகளிலும் சுறுசுறுப்பான டான்ஸ் மூவ்மெண்ட்களிலும் நம்மைக் கவனிக்க வைக்கிறார். கடைசிக் காட்சியில் ஆறேழு குண்டுகளை நெஞ்சில் தாங்கிக் கொண்டு நான்கைந்து பக்க வசனங்களை மறக்காமல் சொல்லி விட்டுத்தான் கண்ணை மூடுகிறார். இருந்தாலும் மனசில் நிற்கிறார்.

பாடல்கள் கொஞ்சம் நீளம். ஆனால் மோசமில்லை.

ஃபோட்டோகிராஃபி தூள். காட்சிகள் இயல்பாய் இருக்கின்றன.

நிறைய செலவழித்துப் படம் எடுக்கும் போது, அதுவும் சாகரம் என்று பெயர் வைத்த பிறகு, நீளமாய்த்தான் எடுக்க வேண்டும் என்று யாரோ யோசனை சொல்லியிருப்பார்கள் போலும். 'THE END' போடக் குறைந்த பட்சம் நான்கு கட்டங்களை டைரக்டர் தெரிந்தே தவற விடுகிறார்.

உங்களுக்குப் பொறுமை இருக்கிறதா? பொழுது போகும்.

# காதல் அரும்பும் காட்சி ஓர் அழகான கவிதை!



ஆகாயத் தாமரைகள்

# ஒரு காதல் கதைக்குப் பரபரப்பு வர்ணம்!

பெயர் காண்பிக்கப்படும்போது ஒவ்வொரு போலீஸ் தலையாய்க் காண்பிப்பதும் அப்புறம் கலெக்டர் வருவதும், இந்தச் சிறிய கிராமத்திலா இவ்வளவு பெரிய சண்டை என்கிறரீதியில் கலெக்டர் பேசுவதும் நிறைய எதிர்பார்ப்புகளை மனத்தில் தூவிவிடுகின்றன.

"இன்னொரு 'தண்ணீர், தண்ணீர்', 'அச்சமில்லை, அச்சமில்லை' போய்" என்று மனத்தில் எக்காளமிட வைப்பதோடு சரி.

அப்புறம் —

கொடுமைக்காரப் பெரியமனிதர் (அடடே ஜெய்கணேஷ்), அவருடைய கொடுமைக்கார அஸிஸ்டெண்ட் (சத்யராஜ்), சவசவத்த ஜாதிப் பிரச்னையை வைத்துக் கொண்டு கதை. இன்னின்ன ஜாதி என்று நறுக்குத் தெறித்தாற் போல் சொல்லாததாலோ என்னவோ அந்தப் பிரச்னையில் கூட ஆழமே யில்லாமல் இருக்கிறது.

ஒழிந்து போகிறது விடுங்கள்!

ரேவதிதான் கதாநாயகி. மறுபடி ஒரு துடுக்குப் பெண். ரேவதியை அந்தப் பாத்திரத்திற்காகவே வார்ப்படம் செய்துவிட்டார்கள் போலும். ஒரு மாற்று குறைவில்லாமல் செய்திருக்கிறார்.

சுரேஷ் — கதாநாயகன் இடத்தை நிரப்புகிறார். ஒரு டூயட், ஒரு ஸ்டண்ட், என்று கொடுத்த வேலையைச் செய்துவிடுகிறார்.

மனோரமா, சத்யராஜ் எல்லாம் ஒப்புக்குச் சப்பாணி மாதிரி வந்துவிட்டுப்போவதுதான் கஷ்டமாக இருக்கிறது.

கவுண்டமணி பேயோட்டும் பூசாரி. குடுமி வைக்காத மாடர்ன் பூசாரி. ரஜினியை ரைட் கொடுப்பதும், பேயை வரவழைப்பதும், சீதனங்களை எல்லாம் வண்டியில் ஏற்றிக் கொள்வதும் — கதையோடு ஒட்டாத காமெடி தான் என்றாலும் கலகல காமெடி.

பாங்க் பணம் பறிபோகும் சமாசாரம் சரியான 'காதுல பூ'.

ஒரு காதல் கதையை உள்ளது உள்ளபடி சொன்னால் எங்கே எடுபடாமல் போய் விடுமோ என்று ஐயப்பட்டுக் கவச போலீஸ், கண்ணீர் குண்டு என்று பரபரப்பு வர்ணங்களைச் சேர்த்து ஒரு புதுமையான கதையைச் சொல்லியிருப்பது போல் பாவனை காட்டியிருக்கிறார். அந்த வகையில் டைரக்டர் சாமர்த்தியசாலிதான்.

— ஜெயமன்மதன்.

இந்தியன் ஏர்லைன்ஸ் ஏர் ஹோஸ்டஸ்கள் கட்டிக் கொள்வதற்காக ஒரே டிஸைனில் 26 ஆயிரம் மீட்டர் பட்டுப் புடவை சப்ளை பண்ணியிருக்கிறதாம் கர்நாடகா சில்க் இண்டஸ்ட்ரீஸ் கார்ப்பரேஷன் மைசூர் சில்க் ஃபாக்டரி.

— மௌஷ்மி



# காத்திருக்கும் கன்னட சினிமா



* புட்டண்ணு கனகால்.



* காசிநாத்.

சில வருடங்களுக்கு முன் இந்தியா வெங்கும் பரவலாகப் பேசப்பட்ட கன்னட சினிமா இன்றைக்கு மறுபடியும் சிறிய வட்டத்துக்குள் போய்விட்டது. சம்ஸ்காரா, காடு, சோமனதுடி, வம்சவிருக்ஷா என்று அகில உலகத் திரைப்பட விழாக்களிலும், இந்தியாவின் சகல பத்திரிகைகளிலும் பிரமாதப்பட்ட கன்னட சினிமா தற்சமயம் நீர்த்துப்போன குடும்பக் கதைகளையும், உப்புச் சப்பில்லாத மசாலாக்களையுமே பெருவாரியாகப் படம் பிடித்துக் கொண்டிருக்கிறது.

கன்னட சினிமாவைக் கர்நாடக எல்லையை விட்டு வெளியே கொண்டு வரக் காரணமாயிருந்தவரே மறைந்த புட்டண்ணு கனகால்தான். தமிழின் பாலசந்தரைப்போல துணிச்சலான விஷயங்களைத் தொடும் தைரியமும் சொல்ல நினைத்ததை மற்றவர்களிலிருந்து வேறுபட்டு வித்தியாசமாய்ச் சொன்ன திறமையும் அவருக்கிருந்தது. தேவதாசி ஒருத்தியின் கதையைப் பட்டவர்த்தனமாய் 'கெஜ்ஜேபூஜை'யில் சொன்னபோது கன்னட சினிமா உலகம் அதிர்ந்தது. அவருடைய கலை அழகையும், நெஞ்சையள்ளும் விதத்தில் கதை சொல்லும் பாணியையும் அவர் படங்கள் தெரிவித்தன. 'எடகல்லு குட்டத மேலே' கதையில் விரகதாபத்தைக் கத்திமேல் நடப்பது போன்ற சாமர்த்தியத்துடன் சொல்லியிருந்தார்.

பரீட்சார்த்தமான நாடகங்கள் மூலம் சாதனைகள் நிகழ்த்தியவர்கள் கிரிஷ்கர்னாடும் பி. வி. காரந்த்தும். யயாதி, துக்ளக், ஹயவதனா, காடு, சோமனதுடி என்று நாடகங்களில் ஒரு புதிய அலையை உருவாக்கினர் இருவரும். பின் இவற்றில் பல திரைப்படங்களாகிப் புகழ் வலம் வந்தன. கிரிஷ்கர்னாட் பம்பாய் சென்றார். இந்தியில் நடிக்க ஆரம்பித்தார். ஹேமமாலினியைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறவர் என்று முகம் காட்டப்பட்டு இந்திப் படங்களில் நடிக்கப் புகுந்து, இன்றைக்கு, 'நான் இந்தியில் ரொம்ப பிஸி, 'காந்தான்', டீ. வி. படத்திற்கும் சங்கராபரணம் இந்திப் பதிப்பிற்கும் நடித்துக் கொண்டிருப்பதில் கன்னடத்தில் கவனம் செலுத்த முடியவில்லை'' — என்று பேட்டி தந்து கொண்டிருக்கிறார்.

பி. வி. காரந்த் பூனா பிலிம் இன்ஸ்டிடியூட் தலைவராக நியமிக்கப்பட்டுப் போனவர் தான். அவருடைய மனைவிதான் 'பனியம்மா' படமெடுத்துச் சிறிய சலசலப்பை உண்டு பண்ணினார். பரீட்சார்த்த முறையில் வெளி வந்த இரண்டொரு படங்களும் தோல்வியைத் தழுவ 'நமக்கேண்டா வம்பு' என்று கலை, சோதனை, வித்தியாசம், off beat. எல்லா சமாச்சாரங்களையும், உதறிவிட்டுப் பழைய படி பிருந்தாவனத்திலும் லால்பாக்கிலும் லட்சுமியையும், ஆர்த்தியையும் துரத்திக் கொண்டு டூயட் பாடும் அனந்தநாக் பின்னாலும் விஷ்ணுவர்த்தன் பின்னாலும் நடை போடத் துவங்கிவிட்டது கன்னட சினிமா.

இளைஞர்களான டி. எஸ். ரங்காவும், காசிநாத்தும் கொஞ்சம் முயற்சி செய்தார்கள். இதில் பெரிய வெற்றியைப் பெற்றவர் காசிநாத். அவரது 'அனுபவா' மாதக்கணக்காக ஓடிக் கொண்டிருக்கிறது. அனுபவாவின் கதை சொல்ல தைரியமில்லை. அடிப்பீர்கள்: காசிநாத்தும், நம்ம ஊர் ராஜேந்தர் அல்லது பாக்கியராஜ் மாதிரி. கதை—திரைக்கதை—வசனம்—டைரக்ஷன்—கதாநாயகன்—தயாரிப்பு அத்தனை பொதிகளையும் அவரேதான் சுமக்கிறார்.

கிரிஷ்கர்னாட், பி. வி. காரந்த் இவர்களின் நாடகக் குழுவிலும் சினிமா யூனிட்டிலும், இருந்த டி. எஸ். ரங்கா, வித்தியாச டைரக்டர் என்று பெயரெடுத்தவர். இப்போது என்ன செய்கிறார்? 'கித்' படம் எடுத்து வருகிறார். ''ஸ்மிதா பாட்டீலும், ஓம்புரியும் பிரமாதமாய்ச் செய்திருக்கிறார்கள்...'' என்றார்.

''ஸ்மிதா பாட்டீல்.... ஓம்புரி... அப்படியானால் இந்திப் படமா இது? கன்னடப் படமில்லையா?''

''இந்திதான். இந்திப் படம் மூலம் பரவலான மக்களைச் சென்றடைய முடிகிறது. வியாபாரத்தில் மிகப் பெரிய அளவில் கிளை பரப்ப முடிகிறது. பணம், பெயர், புகழ் எல்லாமே ஒரு மாநிலமொழிப்படம் செய்வதைக் காட்டிலும் பெரிதாகப் பரந்த அளவில் பெற முடிகிறது. அதனால்தான் இந்தியில் படம் செய்கிறேன்!

ஆக, கன்னடத் திரையுலகம் வசந்தம் நோக்கிக் காத்திருக்கத்தான் வேண்டும்.

— ஐ. மெல்க்கியூ

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani    Editor: K. Rajendran

# ஸன்ரைஸ் ஃப்ளாஸ்க் அன்பளிப்பு!

## இலவசம்!

**இந்த தனிச்சிறப்பான ஸன்ரைஸ் ஃப்ளாஸ்க், 6 காலியான 200 கிரா. ஸன்ரைஸ் ரீஃபில் பேக்குகளிற்கு பதிலாகக் கிடைக்கும்.**

இப்போது, உங்களுக்கு பிடித்தமான ஸன்ரைஸ் காப்பியை நீங்கள் எங்கே வேண்டுமானாலும் எடுத்துக் கொண்டு போகலாம், அதற்கே உரிய அழகான ஸன்ரைஸ் ஃப்ளாஸ்கில்! நீங்கள் செய்யவேண்டிய—தெல்லாம் இவ்வளவே—6 காலியான 200 கிரா. ஸன்ரைஸ் ரீஃபில்பேக்குகளை சேர்த்து உங்களுடைய டீலரிடம் கொடுக்கவும். ஒரு வாரத்திற்குள் அவருடைய கடையில் ஒரு ஸன்ரைஸ் ஃப்ளாஸ்க் உங்களுக்காகவே காத்துக் கொண்டிருக்கும். நீங்கள் அடுத்தமுறை போகும்போது அதைப் பெற்றுக் கொள்ளலாம். விஷயம் எத்தனை எளிமையானது, பார்த்தீர்களா? ஆகவே, இன்றே உங்களுடைய ரீஃபில் தொகுப்பை சேர்க்கத் தொடங்குங்கள்.






இந்த அன்பளிப்பு பின்பக்கம் ★ இருக்கும் பேக்குகளிற்கு மட்டுமே.




**Nestlé**

# ஸன்ரைஸ்

**இன்ஸ்டன்ட் காப்பி-சிகரி ப்ளெண்ட்**

முந்துங்கள்!
இந்த அன்பளிப்பு ஃப்ளாஸ்குகளின் சரக்கு தீரும்வரையே செல்லும்.

அம்மாவின் அந்த முதல் காப்பியின் புத்துணர்ச்சியூட்டும் நறுமணத்துடன்.

FSL-8682 Tam

